இருமலும் ஜலதோஷமும் உங்களை பலவீனப் படுத்தும்—இதர நோய்கள் பாதிக்கவும் இடமளிக்கும்.

# வாடர்பரீஸ் காம்பவுண்ட் அருந்தி ஆரோக்கியமாகவும் சக்தியுடனும் திகழுங்கள்




இருமலும் ஜலதோஷமும் உங்களை பலவீனப்படுத்தி, நோய்களை எதிர்க்கும் சக்தியைக் குறைப்பதால், இதர நோய்கள் உங்களைப்பாதிக்கக்கூடும். எனவே தவறாது வாடர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிட்டு வாருங்கள். பசியைத் தூண்டி, இழந்த சக்தியை மீட்டு, உடலுக்கு நோய்த்தடுப்புச்சக்தியை அளிக்கும் ஊட்டப்பொருள்கள் அடங்கியது வாடர்பரீஸ் காம்பவுண்ட். அதிலுள்ள க்ரியோஸோட் மற்றும் க்வயாகால் இருமலிலிருந்தும் ஜலதோஷத்திலிருந்தும் நிவாரணம் அளிக்கின்றன

**வாடர்பரீஸ் காம்பவுண்ட்—மிகவும் நம்பகமான டானிக்**

வார்னர்-ஹிந்துஸ்தான் லிமிடெட்

WH 7985 TH

# கல்கி
## பொருளடக்கம்



சௌமிய, கார்த்திகை 1 — 1969, நவம்பர் 16



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

கட்சியின் செல்வாக்கு
இந்த விளையாட்டு எதற்கு?
தேச நலன்
சுய கௌரவம்


இவைதான் இன்றைய நாகரிகம். உங்களுக்கு எது வேண்டுமோ தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள். எல்லாம் ஒரே விலைதான்.
இதய நோய்



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 29 □ இதழ் 16

# நாட்டின் அவசரத் தேவை

''சிண்டிகேட்'' என்று சொல்லப்படும் மூத்த காங்கிரஸ் காரியக் கமிட்டித் தலைவர்களுக்கும் பிரதம மந்திரிக்குமிடையே தகராறு முற்றி விட்டது. எதிர்பாராத வகையில் சமரஸம் ஏற்பட்டாலொழிய நுனி முதல் அடி வரை காங்கிரஸ் ஸ்தாபனம் இரண்டாக உடைந்து விடும் போல் தோன்றுகிறது. காங்கிரஸ் காரியக் கமிட்டி கூடிய தருணத்திலேயே, தமது ஆதரவாளரைக் கொண்ட போட்டிக் காரியக் கமிட்டிக் கூட்டத்தைப் பிரதம மந்திரி நடத்தியிருக்கிறார். காங்கிரஸ் தலைவர் நிஜலிங்கப்பாவுக்குப் பதிலாக வேறு ஒரு தலைவரை தேர்ந்தெடுப்பதற்காகப் பிரதமரின் ஆதரவாளர் அ.இ.கா.க.வின் விசேஷ கூட்டத்தைக் கோரினர். அது செல்லத்தக்கதல்ல என்று சொல்லிக் காரியக் கமிட்டி நிராகரித்து விட்டது. டிஸம்பரில் அ. இ. கா. க. கூடுவதற்கு அது ஏற்பாடு செய்துள்ளது. ஆனால் இந்திரா தாமே முன்வந்து அ. இ. கா. க. தில்லியில் இம்மாத இறுதியில் கூடுமென்று அறிவித்துள்ளார். இம்மாதிரி போட்டா போட்டி ரீதியில் பிரதமர் கோஷ்டி நடந்து கொண்டது கட்சிக் கட்டுப்பாட்டுக்கும் நலனுக்கும் விரோதமானது; எனவே, நடவடிக்கைக்கு உரித்தானது என்று கருதி பிரதம மந்திரி உட்பட சர்க்கார்த் தலைவர்கள் சிலருக்குக் காங்கிரஸ் தலைவர் நோட்டீஸ் அனுப்பியிருக்கிறார். ஏற்கனவே, மொரார்ஜி தேசாய் உட்பட சிண்டிகேட் ஆதரவாளர்களான ஐந்து மந்திரிகளை விலக்கிவிட்ட பிரதம மந்திரி, மிக நேர்மையாளர் என்று போற்றப்படும் ரயில்வே மந்திரி ராம் சுபாக் சிங்கைச் சென்ற வாரம் பதவி நீக்கம் செய்துள்ளார். அதிகாரபூர்வமான காரியக் கமிட்டியில் அவர் ஆஜராகியிருந்தார் என்பதே இதற்குக் காரணம்.

காங்கிரஸ் மேலிடத்தில் தொடங்கியுள்ள இந்தப் பிளவு ராஜ்யங்களையும் பாதிக்க ஆரம்பித்திருக்கிறது. அவற்றிலுள்ள காங்கிரஸ் சர்க்கார்களும், பிரதேச காங்கிரஸ் கமிட்டிகளும் கோஷ்டி ஆதரவாளர்களாக மாறுகின்ற நிலைமை வந்து விட்டது. மத்திய சர்க்காரில் மட்டுமின்றி ராஜ்யங்களிலும் சர்க்கார்கள் பலவீனமடைந்து, நல்லாட்சியின் தேவைகள் வெகுவாகப் புறக்கணிக்கப்பட்டு வருகின்றன. நிலைமை தமக்குப் பாதகமாகத் திரும்பினால் லோக் சபையைக் கலைத்துவிட்டு இடைக்கால பொதுத் தேர்தலை நடத்துவதற்குப் பிரதம மந்திரி தயாராகி வருவதாகவும் பேசப்படுகிறது.

காங்கிரஸின் மேலிடத்துச் சண்டையைப் பற்றிய தகவல்களும், ஹேஷ்யங்களும் தினசரிப் பத்திரிகைகளில் அன்றாடம் நிறையக் காணப்படுகின்றன. இத்தனை கூச்சலுக்கும், சண்டைக்குமிடையே சில நல்லவர்கள் அடிப்படைப் பிரச்னைகளில் கவனம் செலுத்தி வருகிறார்கள். பார்லிமெண்டுடன்கூடிய ஜனநாயக ஆட்சிமுறை பழுதின்றி காப்பாற்றப்பட வேண்டும் என்பதில் அவர்கள் அக்கறை காட்டி வருகிறார்கள். நல்லாட்சியை, வற்புறுத்தி வருகிறார்கள். மக்களையும் அவர்களது க்ஷேம நலனையும் பாதிக்கின்ற உள்நாட்டு, அயல்நாட்டுக் கொள்கைகள் சிறப்பாக அமைய வேண்டும் என்று அவர்கள் கோரி வருகின்றனர். அரசுடைமை ஆதிக்கத்தைத் தடுத்து அதை வெகுவாகக் குறைக்க வேண்டுமென்பதில் அவர்கள் கவலை உள்ளவர்களாக இருக்கிறார்கள்.

தங்கு தடையின்றி முழு அளவில் பொருள் உற்பத்தி பெருகிக் கொண்டே போவது அவசியம். அது இல்லாவிடில் மக்களின் க்ஷேம நலனைப் பற்றிய பேச்செல்லாம் வெறும் கோஷமாகத்தான் இருக்கும். எனவே, உற்பத்திப் பெருக்கு கைகூடுவதற்குப் பாதகமாக இருந்துவரும் தடைகளை விலக்கி ஊக்கமளிக்க வேண்டுமென்று அவர்கள் பாடுபடுகிறார்கள். தவறான அயல்நாட்டுக் கொள்கைகளைச் சர்க்கார் பின்பற்றி வருவதால் இந்தியாவுக்கு

வெளிநாடுகளில் அவமானம் விளைகிறது, அதன் நலன்கள் பெரிதும் பாதிக்கப்படுகின்றன என்று நினைப்பவர்களும் இருக்கிறார்கள்.

இன்றைய அவசரமான தேவை என்ன? இப்பொழுது வருத்தும் பொருளாதாரச் சிரம நிலைகளிலிருந்து நாடு மீள வேண்டும். அதற்குத் துணை புரியக்கூடிய புத்திமதிகளை அளிப்பதற்குத் தகுதி உள்ளவர்கள் இருக்கிறார்கள். அவர்களைக் கேட்டு யோசனைகளைப் பெறக்கூடிய நல்ல சர்க்கார்தான் இன்று அவசரமாகத் தேவை. தமது சொந்த அதிகாரத்தைவிட நல்லாட்சியில் அதிக அக்கறை உள்ள நல்லதொரு பிரதம மந்திரி மிக மிகத் தேவை. தமது பதவிகளிலேயே நாட்டமுள்ளவர்களைக் கொண்ட மந்திரி சபைக்குப் பதிலாகத் தேச பக்தர்களைக் கொண்ட சபை தேவை. வெளுத்ததெல்லாம் பால் என்று நம்பும் மக்கள் தரக்கூடிய அபிமானத்தைக் கண்டு மதிமயங்கித் தவறுகளை இழைக்காதபடி பிரதம மந்திரிக்கு மந்திரி சபையினர் காப்பாளராக இருக்க வேண்டும்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

அமெரிக்கா தொழில்வளம் பெருகிய சமுதாயம். ஆனால், இதனால் நிமைடியும் வழிந்தோடுகின்றது என்பதை புலப்படுத்துகின்ற விளம்பரமொன்று ஒரு சஞ்சிகையில் வெளியாகியுள்ளது. ஒவ்வொரு நாளும் அந்தத் தேசத்தில் 17,300 கோடி காலன் கழிவுப் பொருள்களும், சாக்கடை நீரும், நீர்நிலைகளிலும் ஆறுகளிலும் போய் விழுகின்றன. நீர்நிலைகள் அசுத்தப்படும் வேகம் படிப்படியாக அதிகரித்துக் கொண்டே வருகிறது. அதைப்போன்றதொரு நிலைமை இந்தியாவில் ஏற்படும்படி விடலாகாது. நிலைமை மிஞ்சிவிடு முன் ஆவன செய்து அப்போக்கைத் தடுக்க வேண்டும். பெரிய அளவில் தொழில்கள் வளர்வதன் விளைவுகளைப் பற்றிச் சென்ற நூற்றாண்டில் எச்சரித்தவர்கள் பலர் உண்டு. அவர்கள் கூறியது எவ்வளவு தூரம் நடைமுறைக்கு இசைவான புத்திமதி என்பதை நாம் இப்பொழுது உணர ஆரம்பித்திருக்கிறோம்.

★

அணுகுண்டுகளையும், அந்த வகையைச் சேர்ந்த குண்டுகளையும் உற்பத்தி செய்பவர்கள், அத்தயாரிப்பு, அவைபோன்ற குண்டுகளை எதிராளி உபயோகப்படுத்தாமல் தடுப்பதற்கும், மிரட்டி பயமுறுத்தி வைப்பதற்கும் பயன்படுகின்றது என்று சமாதானம் கூறுகிறார்கள். ஆனால், இந்த உற்பத்தி, எதிர்பார்க்கும் நல்ல பயனைத் தவிர கொஞ்சங்கூட விரும்பத்தகாத விளைவையும் ஏற்படுத்தி விடுகிறது. அதாவது எதிராளியின் பாசறையிலும் மேற்குறிப்பிட்ட ஆயுதங்களின் உற்பத்தி பெருகிக் குவிந்து போகிறது. இந்த ஜலஜ குண்டு ஏற்படுத்தியுள்ள நிலைமையை சாங்கோபாங்கமாக நார்மன் மாஸ் என்பவர், ''கடவுளாக நடிக்கும் மக்கள்'' என்ற புத்தகத்தில் விளக்குகிறார். அவர், அணுகுண்டுகளுக்காக மேற்கொள்ளப்படும் ஒவ்வொரு நடவடிக்கையும் வேறொரு விசித்திர நிலையை உண்டாக்கி விடுகிறது என்று கூறி அதை விளக்குகிறார்.

சமபலம் பெற உபயோகமாகும் என்று மேற்கொள்ளப்படும் நடவடிக்கையே அணுகுண்டு ஆயுதப் போட்டியைத் தூண்டி விடுகிறது!

அணுகுண்டு பக்தர்கள், தங்கள் கருத்துக்கு ஆதரவாக ஒரு புதுக் கொள்கையை வளர்த்துள்ளார்கள். அதாவது இந்த அணுகுண்டு உயிர்பெற்று மனித விருப்பு — வெறுப்புக்கு ஆட்படாமல் சுயமாகவே வளரக்கூடிய தன்மை பெற்று விட்டதாம். அதன் வளர்ச்சியைத் தடுக்க முடியாது என்று கூறி வருகிறார்கள். எனினும், ஆப்பென்ஹைமர் என்ற அணுகுண்டு விஞ்ஞானி மட்டும் நிலைமையைத் தெளிவாகக் கூறிவிட்டார். ''என் அபிப்பிராயத்தில் பொறி இயல் துறையில் மனத்தைக் கவரக்கூடிய தன்மையைக் காணும் போது, அதன் வசப்பட்டு அதைப் பரிபூரணமாகச் செய்து முடிக்கும் வரையில் நிம்மதி கொள்வதில்லை. அந்தப் பொறி இயலில் வெற்றி கிட்டியபின்தான், அந்தப் பொறியை எப்படிப் பயன்படுத்துவது என்ற சர்ச்சையில் இறங்குகிறோம்.'' யந்திரங்களைப் பயன்படுத்த விரும்பும் மனப்பான்மை — பொறி இயல் துறையில் ஏற்பட்டுள்ள மோகம் — இந்தப் பேராபத்தான நிலைக்கு உலகைக் கொண்டு வந்துள்ளது. அதாவது கட்டுப்படுத்த முடியாதபடி, இயந்திர பூதம் வளர்ந்து விட்டிருக்கிறது. உயிரினங்களிலேயே மிகக் கொடிய உயிரினமான மனித இனத்தையே அழிக்கத் தோன்றினாற் போல் இயந்திர பூதம் இருக்கிறது!

தடுப்புக்காக என்பது மாயை. எதிராளியை அதிகமாக உற்பத்தி செய்யத் தூண்டவே அணுகுண்டு உற்பத்தி பயனுறுகிறது!

★

நாம் நமது தனிப்பட்ட வாழ்வில், யமனைத் தவிர்க்க முடியாத துணையாகக் கொண்டு வாழ்கிறோம். அதே போல் நமது தேசிய வாழ்விலும், அணுகுண்டுகளைத் தவிர்க்க முடியாத துணையாகக் கொண்டு வாழ்வோமாக. — இவ்வாறு அணுகுண்டுகளை உற்பத்தி செய்வதில் அக்கறையுள்ளவர்கள் வாதாடுகிறார்கள். மனிதன் சிருஷ்டித்த துர்ப்பாக்கியத்துக்குப் பணிந்து போவது அரசாங்கங்களின் ராணுவ இலாக்காக்களின் மனப்பான்மை மட்டுமல்ல, ராணுவ தளவாட உற்பத்தியில் ஈடுபட்டுள்ள தொழில் துறையாளரின் மனப் போக்கும் அதுவாகவே இருக்கிறது. தனி மனித வாழ்வில் இறப்பு தவிர்க்க முடியாததாயினும், சாவினை எவ்வளவு தூரம் தள்ளி வைக்க முடியுமோ அவ்வளவு தூரம் தள்ளி வைக்க மருத்துவம் சாஸ்திர சிகிச்சைகள் மூலம் முயற்சிகள் எடுத்துக் கொள்கிறோம். மரணத்தினால்

ஏற்படக் கூடிய பின்விளைவுகளை மனத்தில் கொண்டு ஆயுள் இன்ஷியூரன்ஸ் செய்து கொள்கிறோம். ஆகவே, அணு ஆயுதங்களை மனித வாழ்வுடன் இணைந்துள்ள மறவியுடன் ஒப்பிட முடியாது. மனிதன் சிருஷ்டித்த துர்ப்பாக்கிய நிலைகளை, தனி மனிதனாயினும் தேசமாயினும் புத்திசாலித்தனமாக நீக்கியே தீர வேண்டும். மனிதன் உயிர் வாழ்ந்திருப்பதையும், பண்பாட்டைக் காப்பாற்றுவதையுமே நோக்கமாகக் கொள்ள வேண்டும். இந்த லட்சியத்தை நிறைவேற்ற அவசியமானவற்றைச் செய்ய வேண்டும். தற்கொலை செய்து கொள்ளும் திசையில் ''தவிர்க்க முடியாது'' என்று கூறிக் கொண்டு செல்லக் கூடாது. நாம் வனவிலங்குகளைப் பின்பற்றுவோம். விலங்குகள் தம் இனத்தைச் சேர்ந்த பிராணிகளைக் கொல்வதில்லை. மற்ற இனப் பிராணிகளைத்தான் தாக்குகின்றன. விலங்கினத்திலிருந்து பரிணமித்து வந்த மனிதனின் அறிவு, விலங்கினத்தின் இயல்பான உணர்ச்சியை விடக் கீழானதா, என்ன ?

★

'யு. எஸ். நியூஸ் அண்டு ஓர்ல்ட் ரிப்போர்ட்' என்ற பிரபல அமெரிக்கப் பத்திரிகை, மேற்கு ஜெர்மனியில் பதவிக்கு வந்துள்ள (சோஷலிஸ்ட்) வில்லி பிராண்ட், சோஷலிஸ வழியில் பிரமிப்பூட்டும் மாறுதல்கள் செய்வார் என்று எதிர்பார்க்கவில்லை. ஏனெனில், கூட்டுச் சேர்ந்து கொண்டிருக்கும் ''ப்ரீ டொமாகிராடிக்'' கட்சி, ஜெர்மனிக்கு இன்னும் அதிக சோஷலிஸம் கொண்டு வருவதை மிகக் கடுமையாக எதிர்க்கும் கொள்கையுடையது. மேலும், மேற்கு ஜெர்மனி, உலகிலுள்ள க்ஷேமநல அரசாங்கங்களில் மிக அதிகமான அளவு க்ஷேமநலத் திட்டங்களை நிறைவேற்றியுள்ள நாடு. ஆகவே, சோஷலிஸ்டுகளுக்கு அத்துறையில் வேலை செய்வதற்கு ஒன்றுமே விட்டு வைக்கப்படவில்லை.

# என்ன சேதி?

## விசைத்தறி வேண்டுமா ?

திராவிட முன்னேற்றக் கழகத்தார் கைத்தறி நெசவாளர்களுக்கு உற்ற நண்பர்கள் என்று பெயர் எடுத்தவர்கள். இதன் விளைவாகத்தான், தி. மு. க. பொதுக் கூட்டங்களில், மாலைகளுக்குப் பதிலாகக் கைத்தறித் துண்டுகளைத் தலைவர்களுக்கு அணிவிப்பது என்ற சம்பிரதாயமும் ஏற்படலாயிற்று.

இப்படி யெல்லாம் கைத்தறி நெசவாளர்களுக்கு உற்ற துணையாக இருந்தவர்கள், இப்பொழுது தமிழ்நாட்டில் 12,500 விசைத்தறிகளை ஏற்படுத்த இணங்கியிருக்கிறார்கள்.

சென்ற பதினைந்து ஆண்டுகளாக மத்திய அரசும், திட்டக் கமிஷனும், தமிழகத்தில் விசைத் தறிகளைப் புகுத்த முயன்று வந்திருக்கின்றன. ஆனால் காங்கிரஸ் அரசாங்கம், விசைத் தறிகளைப் புகுத்தினால் கைத்தறி நெசவாளர்கள் பிழைப்பில் மண் விழும் என்று பயந்து அநுமதிக்காதிருந்து வந்திருக்கிறது. இப்பொழுது தி. மு. க. அரசாங்கம் விசைத் தறிகளை உபயோகிக்க அநுமதியளிக்க முன்வந்திருப்பது வியப்பை அளிக்கிறது. ஆனால் கைத்தறி நெசவாளர்களுக்குத் தக்க பாதுகாப்பு அளிக்க முயற்சி எடுக்கப்படும் என்று கூறுகிறார்கள்.

1952ல் கைத்தறி நெசவாளர்கள் நிலை மிக மோசமான கட்டத்தை அடைந்த போது, அவர்கள் கஷ்ட நிவாரணத்துக்கு நிரந்தர பரிகாரம் அளிக்க வழி என்ன என்று கண்டு, அதனைச் சட்டசபையில் நிறைவேற்றியும் வைத்தார், அன்று முதன்மந்திரியாக இருந்த ராஜாஜி. அதாவது, கரை போட்ட வேட்டியும் சேலைகளும் உற்பத்தி செய்யும் உரிமை பரிபூரணமாகக் கைத்தறிகளுக்கே ஒதுக்க வேண்டும் என்றார் ராஜாஜி. ஆனால் மத்திய ஆட்சி அதனை ஏற்காமல் மில் துணிகள் மீது செஸ் வரி விதித்துக் கைத்தறி நெசவாளர்களுக்கு உதவுவதாகப் பேர் பண்ணி வருகிறது. இது கைத்தறி கூட்டுறவுச் சங்கங்களில் இருப்பவர்களுக்குத் தான் ஒரு சிறிது பயனளித்து வருகிறதே தவிர சங்கங்களில் சேராமல் வெளியில் இருக்கும் லட்சக்கணக்கான கைத்தறி நெசவாளர்களைத் தீண்டுவதில்லை.

இப்பொழுது தேச உடைமையாக்கப்பட்டுள்ள பாங்குகளிலிருந்து கடனுதவி பெற நெசவாளர்களுக்கு ஒரு வாய்ப்பு ஏற்படுத்தித் தரத் தமிழக அரசு விசைத்தறிகளைப் புகுத்த இணங்கியிருந்தால், அது சிலருக்கே பயனளிக்குமேயன்றி பரவலாகக் கைத்தறி நெசவாளர்களுக்கு நிரந்தர உதவி செய்ததாகாது. பொதுவாக கைத்தறி நெசவாளர்களின் கஷ்டம் அதிகரிக்கவே செய்யும். ஏற்கனவே இரண்டரைக் கோடி ரூபாய்க்குக் கைத்தறித் துணிகள் தேங்கிக் கிடப்பதாகத் தமிழகக் கைத்தறி நெசவாளர் கூட்டுறவுச் சங்கத் தலைவர் சில நாட்களுக்குமுன் அறிக்கை வெளியிட்டிருக்கிறார். இந்நிலையில் விசைத்தறியை அநுமதிப்பது உசிதமா?

## அந்நிய மூலதனம்

ஒரு நாட்டின் பொருளாதாரம் பெருக, அந்நிய மூலதனத்தை முதலீடு செய்ய நல்ல வாய்ப்பளிக்க வேண்டும். அப்பொழுதுதான் நாட்டில் தொழிலும், வேலை வாய்ப்பும், பொறி இயல் அறிவும் பெருகும் என்பது பொருளாதார சாஸ்திரத்தில் அரிச்சுவடிப் பாடம். ஆனால் நம் நாட்டில் சென்ற சில ஆண்டுகளாக அரசாங்கம் கடைப்பிடித்து வரும் கொள்கைகளும் நடைமுறைகளும் அந்நிய மூலதனம் இந்நாட்டில் வரவிடாமல் செய்வதாகத்தான் இருக்கின்றன. 1966-67ம் ஆண்டில் அந்நிய மூலதனம் நம் நாட்டுக்கு வந்தது 38.6 கோடியாகும். இந்த 68—69ல் எவ்வளவு தெரியுமா? 10.6 கோடி ரூபாய். எவ்வளவு குறைந்து விட்டது பாருங்கள்!

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

ஐந்தாம் அத்தியாயம்

## ராக்கம்மாள்

பழுவேட்டரையரும் பார்த்திபேந்திரனும் சேர்ந்து கடற்கரையோரமாக உலாவச் சென்ற பிறகு நந்தினி சிறிது நேரம் தனியாக இருந்தாள். கடல் அலைகளைப் பார்த்தவண்ணம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள்.

''ராணி அம்மா!'' என்ற குரலைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தாள்.

கலங்கரை விளக்கின் காவலர் தியாக விடங்கரின் மருமகள் அங்கே நின்றாள்.

''நீ யார்?'' என்று நந்தினி கேட்டாள்.

''என் பெயர் ராக்கம்மாள்!''

''எங்கே வந்தாய்?''

இதற்கு மறுமொழி சொல்லாமல் ராக்கம்மாள் நந்தினியின் முகத்தை உற்றுப் பார்த்துக் கொண்டு நின்றாள்.

''என்னடி பார்க்கிறாய்? என் முகத்தில் அப்படி என்ன இருக்கிறது?''

ராக்கம்மாள் திடுக்கிட்டு, ''மன்னிக்க வேண்டும், அம்மா! தங்களைப் பார்த்ததும் இன்னொரு முகம் எனக்கு ஞாபகம் வந்தது. ஆனால் அப்படி ஒருநாளும் இருக்க முடியாது'' என்றாள்.

''என்ன உளறுகிறாய்! எது எப்படியிருக்க முடியாது?''

''அந்த ஊமை வெறியனுக்கும் தங்களுக்கும் யாதொரு சம்பந்தமும் இருக்க முடியாது.''

''அவள் யார் ஊமை?''

''ஈழத்தில் ஒருத்தி இருக்கிறாள்; என் மாமனுக்குப் பெரியப்பன் மகள். சில சமயம் இங்கேயும் வருவாள்.''

''அவளுக்கும் எனக்கும் என்ன?''

''அதுதான் சொன்னேனே, உறவு ஒன்றும் இருக்க முடியாது என்று.''

''பின் ஏன் என்னைப் பார்த்ததும் அவளுடைய ஞாபகம் வந்தது?''

''என் கண்களின் கோளாறுதான். தங்கள் முகம்....''

''அவள் முகம் மாதிரி இருந்ததா?''

''முதலில் அப்படித் தோன்றியது.''

''ராக்கம்மா! இப்போது அந்த ஊமை இங்கே இருக்கிறாளா?''

''இல்லை, அம்மா! அபூர்வமாக எப்போதாவது வருவாள்.''

''மறுபடியும் வரும்போது என்னிடம் அழைத்து வருகிறாயா?''

''எதற்காக, ராணி அம்மா?''

''என் முகம் மாதிரி முகமுடையவளைப் பார்க்க விரும்புகிறேன்.''

''அதுதான் என் கண்களின் பிரமை என்று சொன்னேனே?''

''எதனால் அப்படி நிச்சயமாய்ச் சொல்கிறாய்?''

''ராணி! தாங்கள் பாண்டிய நாட்டைச் சேர்ந்தவர்தானே?''

''ஆமாம்; நீ?''

''நானும் பாண்டிய நாட்டாள். சற்று முன் நான் சொன்ன ஊமை சோழ நாட்டவள். ஆகையால்....''

''இருந்தாலும் பாதகமில்லை, உன்னைப் போல் இன்னும் சிலரும் அவளைப் பற்றி எனக்குச் சொல்லியிருக்கிறார்கள். அவளை என்னிடம் அழைத்து வருகிறாயா? அழைத்து வந்தால் உனக்கு வேண்டிய பொருள் தருவேன்.''

''ராணி அவளை அழைத்து வருவது சுழற் காற்றை அழைத்து வருவது போலத்தான். இருந்த இடத்தில் அவள் இருக்க மாட்டாள். பிறர் சொல்லுவதையும் கேட்க மாட்டாள். வெறி பிடித்தவள் என்று சொன்னேனே ?''

''சரி! நீ எதற்காக இப்போது வந்தாய்? அதை யாவது சொல்!''

''ராணி! சில நாளைக்கு முன்பு இரண்டு பேர் இங்கே வந்தார்கள். தங்கள் பெயரைச் சொன்னார்கள்.''

''என் பெயரை ஏன் சொன்னார்கள்?''

''தங்கள் காரியத்துக்காக அவசரமாக இலங்கைக்குப் போக வேண்டும் என்றார்கள். என் புருஷனை அவர்களுக்குப் படகோட்ட அனுப்பி வைத்தேன்.''

''திரும்பி வந்து விட்டானா ?''

''வரவில்லை ; அதுதான் கவலையாயிருக்கிறது. அவருக்கு ஏதாவது நேர்ந்திருந்தால்....''

''ஒன்றும் நேராது. கவலைப்படாதே! அப்படி ஏதாவது நேரிட்டிருந்தால் உன்னை நான் பார்த்துக் கொள்கிறேன். படகிலே போன மனிதர்களைப் பற்றி ஏதாவது தெரியுமா ?''

''அவர்கள் திரும்பி வந்துவிட்டார்கள். சற்றுமுன் ஆந்தையின் குரல் கேட்டதே ? அதைக் கவனிக்கவில்லையா ?''

''கவனித்தேன். அதனால் என்ன?''

''அது மந்திரவாதியின் குரல் என்று தெரிந்து கொள்ளவில்லையா ?''

''உனக்கு எப்படி அது தெரியும்? நீ மந்திரவாதியைச் சேர்ந்தவளா ?''

''ஆமாம், ராணி!'' என்று சொல்லிவிட்டு, ராக்கம்மாள் கையினால் கோலம் போட்டுக் காட்டினாள்.

நந்தினி அவளை வியப்புடன் உற்றுப் பார்த்துவிட்டு, ''இப்போது அவர்கள் எங்கே இருக்கிறார்கள்? உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டாள்.

''மந்திரவாதி தங்களைப் பார்ப்பதற்காகக் காத்திருக்கிறார்.''

''என்னை வந்து பார்ப்பதுதானே ? எதற்காகக் காத்திருக்க வேண்டும்?''

''இப்போது இங்கு வந்த பல்லவனை மந்திரவாதி சந்திக்க விரும்பவில்லை. ஈழத்தில் அவனைப் பார்த்தார்களாம்! தங்கள் கணவரைப் பார்க்கவும் விரும்பவில்லை!''

''மந்திரவாதியை நீ பார்த்தாயா?''

''சற்றுமுன் ஆந்தைக் குரல் கேட்டுப் போயிருந்தேன். தங்களை அழைத்து வரும்படி சொன்னார். குழகர் கோயிலுக்கருகில் ஓடைக் கரையில் ஒளிந்திருப்பதாகச் சொன்னார். வருகிறீர்களா, ராணி ?''

''அது எப்படி நான் போக முடியும்?''

''குழகர் கோயிலுக்குப் போவதாகச் சொல்லி விட்டுப் போகலாம்.''

'' நல்ல யோசனைதான் ; வேறு துணை வேண்டாமா?''

''அவசியமில்லை ; வேண்டுமானால் சேந்தன் அமுதனைத் துணைக்கு அழைத்துப் போகலாம்.''

''அவன் யார் ?''

''தஞ்சாவூர் ஊமையின் மகன்!''

''சிவ சிவா! எத்தனை ஊமைகள்?''

'' இந்தக் குடும்பம் சாபக்கேடு அடைந்த குடும்பம். சிலர் பிறவி ஊமைகள். சிலர் வாயிருந்தும் ஊமைகள். என் புருஷன் அப்படி. அருமையாகத்தான் பேசுவார். நானும் பேச வேண்டாம் என்று திட்டம் செய்திருக்கிறேன்.''

'' இலங்கை ஊமைக்கு மக்கள் உண்டா ? உனக்குத் தெரியுமா ?''

'' ஒரு தடவை இரட்டைக் குழந்தைகள் பெற்றுளாம். குழந்தைகள் என்ன ஆயின என்று ஒருவருக்கும் தெரியவில்லை. நானும் அந்த இரகசியத்தைத் தெரிந்து கொள்ள எத்தனையோ நாளாக முயன்று வருகிறேன். இது வரை பலிக்கவில்லை.''

'' தஞ்சாவூர்க்காரன் இங்கே எதற்காக வந்திருக்கிறான் ?''

''அவனுடைய மாமன் மகள் பூங்குழலியைத் தேடிக் கொண்டு வந்தான். அவள் இல்லை. அதனால் காத்திருக்கிறான்.''

''அவள் எங்கே போய் விட்டாள்?''

''நானே சொல்ல வேண்டும் என்றிருந்தேன். மந்திரவாதியை என் புருஷன் படகில் ஏற்றிக் கொண்டு போனதற்கு மறு நாள் இன்னும் இரண்டு பேர் வந்தார்கள். அவர்களைப் பிடிப்பதற்காகப் பழுவூர் ஆட்களும் தொடர்ந்து வந்தார்கள். அவர்களில் ஒருவனை என் நாத்தி படகில் ஏற்றிக் கொண்டு இரவுக்கிரவே இலங்கைக்குப் போனாள்.''

'' அவளுக்குப் படகு விடத் தெரியுமா ?''

''படகு விடுவதே அவளுக்கு வேலை. படகு விடாத நேரங்களில் கோடிக்கரைக் காடுகளில் சுற்றி அலைவாள். இந்தக் காட்டில் அவளுக்குத் தெரியாத மூலை முடுக்கு ஒன்றுமே கிடையாது.''

''அவள் இன்னும் திரும்பி வரவில்லையென்றால், அதைக் கொண்டு நீ என்ன ஊகிக்கிறாய் ?''

'' யாரோ கடலில் முழுகிப் போய் விட்டதாக இவர்கள் அலறி அடித்துக் கொள்கிறார்களே, அது நிச்சயமல்லவென்று சொல்கிறேன். பூங்குழலி வந்த பிறகுதான் அது நிச்சயமாகும்.''

'' அந்தப் பெண்ணும் முழுகியிருக்கலாம் அல்லவா ?''

''அவள் முழுக மாட்டாள். கடல் அவளுக்குத் தொட்டில். மேலும்...''

''மேலும், என்ன ?''

''சற்று முன்னால் கலங்கரை விளக்கின் உச்சியில் ஏறிப் பார்த்துக் கொண்டிருந்தேன். வெகுதூரத்தில் ஒரு படகு வருவதுபோல் தோன்றியது....''

'' அப்புறம் ?''

'' அப்புறம் அது கரைக்கு வரவில்லை.''

''என்ன ஆகியிருக்கும் ?''

''இங்கே கடற்கரை ஓரத்தில் கூட்டமாயிருப்பதைப் பார்த்துவிட்டு வேறு சதுப்பு நிலக் கால்வாயில் படகை விட்டுக் கொண்டு போயிருக்கக் கூடும்.''

'' அதுகூடச் சாத்தியமா ?''

''பூங்குழலிக்குச் சாத்தியமில்லாதது ஒன்றுமில்லை. தஞ்சாவூர்க்காரனும் என்னுடன் உச்சிக்கு வந்து பார்த்துக் கொண்டிருந்தான். அவனுக்கும் அப்படியே தோன்றியதாம்.''

''சரி; எப்படியாவது இருக்கட்டும்; நாம் இப்பொழுது குழகர் கோயிலுக்குப் போகலாம், வா !''

'' துணைக்குச் சேந்தன் அமுதனைக் கூப்பிடட்டுமா ?''

''வேண்டாம் ! அவன் தன்னுடைய மாமன் மகளைத் தேடட்டும். நாம் அதற்குக் குறுக்கே நிற்க வேண்டாம்.''

இருவரும் குழகர் கோயிலை நோக்கிப் புறப்பட்டார்கள். பூங்குழலியைப் போலவே ராக்கம்மாளுக்கும் கோடிக் கரையின் புதை சேற்றுக் குழிகளைப் பற்றி நன்கு தெரிந்திருந்தது. நந்தினிக்கு ஜாக்கிரதையாக வழிகாட்டி அழைத்துக் கொண்டு போனுள்.

இருவரும் குழகர் ஆலயத்தை அடைந்தார்கள். கோயில் பட்டர் அவர்களைக் கண்டு வியப்படைந்தார்.

''ராணி! இது என்ன இந்த நேரத்தில் தனியாக வந்தீர்கள், பரிவாரங்கள் இல்லாமல்? முன்னுலேயே எனக்குச் சொல்லியனுப்பி யிருக்கக் கூடாதா? தங்களை வரவேற்க ஆயத்தமாக இருந்திருப்பேனே ?'' என்ருர்.

''அதற்கெல்லாம் இதுதாஞ சமயம், பட்டரே! சோழ நாட்டுக்குப் பெரும் விபத்து நேர்ந்திருக்கிறதே! சோழ நாட்டு மக்களின் கண்ணின் மணியான இளவரசரைக் கடல் கொண்டு விட்டதாகச் சொல்கிருர்களே? இளவரசரைக் காப்பாற்றி அருளும்படி குழகரிடம் முறையிட்டுக் கொள்வதற்காக வந்தேன்'' என்ருள் நந்தினி.

''அப்படியெல்லாம் ஒன்றும் நேராது, தாயே ! தாங்கள் கவலைப்பட வேண்டாம். நம் பொன்னியின் செல்வருக்குச் சமுத்திர ராஜனுல் ஆபத்து ஒன்றும் நேராது!'' என்ருர் குருக்கள்.

''எதனுல் அவ்வளவு உறுதியாகச் சொல்லுகிறீர்கள், பட்டரே ?''

''இளவரசர் பிறந்த நட்சத்திரமும் லக்கினமும் அப்படி, அம்மா! உலகமாளப் பிறந்தவரைக் கடல் கொண்டு விடுமா? தாங்கள் வருத்தப்படாதீர்கள்! குழகரைப் பிரார்த்தித்துக் கொள்ளுங்கள். அவசியம் இளவரசரைக் காப்பாற்றுவார் !'' என்ருர் பட்டர்.

இவ்வாறு கூறிவிட்டுச் சுவாமிக்குத் தீபாராதனை செய்து திருநீறும் கொடுத்தார். ''அம்மணி! தாங்கள் இவ்வளவு மேலான நிலைமையில் இருப்பது குறித்து மிக்க சந்தோஷம்!'' என்ருர்.

'' என்னை உங்களுக்கு முன்னமே தெரியுமா, பட்டரே?''

''தெரியும், ராணி! பழையாறையில் பார்த்திருக்கிறேன். வைகைக் கரைக் கோயிலிலும் பார்த்திருக்கிறேன். தங்கள் தமையன், திருமலை, — இப்போது என்ன செய்து கொண்டிருக்கிருன் ?''

'' ஆழ்வார்களின் பிரபந்தங்களைப் பாடிக்கொண்டு ஊர் ஊராய்த் திரிந்து கொண்டிருக்கிருன். அவனை நான் பார்த்து வெகு காலமாயிற்று.''

''அவனுக்கும்கூட அதைப் பற்றிக் குறைதான், அம்மா! தாங்கள் பழுவூர் ராணியான பிறகு அவனைப் பார்க்கவேயில்லையென்று வருத்தப்பட்டான்.''

''அதற்கென்ன செய்யலாம், ஐயா! நான் புகுந்த இடத்தில் எல்லாரும் பரம சைவர்கள். அவனே வீர வைஷ்ணவன். 'ஆழ்வார்க்கடியான்' என்று பட்டப் பெயர் வைத்துக் கொண்டு சைவர்களோடு சண்டை போட்டுக்கொண்டு திரிகிருன். அவனை எப்படி நான் சேர்ப்பது? புகுந்த வீட்டாரின் மனங் கோணுமல் நான் நடந்து கொள்ள வேண்டாமா?''

'' உண்மை, தாயே ! உண்மை ! தங்கள் பதியின் மனங் கோணுமல் நடப்பதுதான் முக்கியமானது. ஆழ்வார்க்கடியான் எப்படியாவது போகட்டும் !''

பட்டரிடம் விடைபெற்றுக் கொண்டு இருவரும் கிளம்பினுர்கள்.




வீணு, மாலினி, சபிதா, காயத்ரி, கமல் குமாரி, வந்தனு, நவகஜா, வஜ்ரேகவரி, அம்புலி, மீன்விழி, அபிராமி, ரேவதி— இவர்கள் முன்னணிக்கு வரத் துடிக்கும் சினிமா நட்சத்திரங்கள் என்று நினைக்கிறீர்களா? அதுதான் இல்லை; புது ரகப் புடவைகளுக்குரிய பெயர்கள்தான் இவை!

அறிய உதவியது: ஒரு ஜவுளிக்கடை விளம்பரம்.

எழுதியவர் : இ. மணிமேகலை.

''தனியாகப் போகிறீர்களே? சற்றுப் பொறுத்தால் நானும் வந்துவிடுவேன்.''

''வேண்டாம், ஐயா! எங்களுக்காக அவசரப்பட வேண்டாம். இந்தப் பெண்ணுக்கு இந்தப் பக்கமெல்லாம் நன்றாய்த் தெரிகிறது. அதோடு இன்றைக்குத் தான் கோடிக்கரை முழுதும் அமளி துமளிப்படுகிறதே! பயம் ஒன்றுமில்லை. நாங்கள் போகிறோம்'' என்றாள் நந்தினி.

இரு பெண்களும் ஆலயத்துக்கு வெளியில் வந்தார்கள். பட்டர் கண் பார்வையிலிருந்து மறைந்ததும் ராக்கம்மாள் நந்தினியின் கையைப் பிடித்து ஆலயத்துக்குப் பின்புறமாக அழைத்துச் சென்றாள். சிறிது நேரத்துக்கெல்லாம் தாழைப் புதர்கள் செறிந்த ஓடைக் கரையை அடைந்தார்கள். நட்சத்திர ஒளியின் உதவியைக் கொண்டு ஓடைக் கரையோடு நடந்தார்கள்.

## ஆறும் அத்தியாயம்

# பூங்குழலியின் திகில்

**தா**ழைப் புதரின் மறைவில் பூங்குழலி மூச்சைப் பிடித்துக் கொண்டு நின்றாள். மந்திரவாதியும் நந்தினியும் மெல்லிய குரலில் பேசிய போதிலும் அவர்களுடைய பேச்சு பெரும்பாலும் அவள் காதில் விழுந்தது.

இளவரசரைக் கடல் கொண்டது என்பதில் தனக்கு நம்பிக்கையில்லை என்று நந்தினி கூறியதற்கு, மந்திரவாதி, ''ராணி! என் பேச்சில் உங்களுக்கு எப்போதுமே நம்பிக்கை யிருப்பதில்லை. எதனால் இப்போது அவநம்பிக்கைப் படுகிறீர்கள்?'' என்று கேட்டான்.

''இளவரசரின் ஜாதக பலத்தைப் பற்றி நீ கேட்டதில்லையா? சற்று முன்னால்கூடக் குழகர் கோயில் பட்டர் அதைப் பற்றிச் சொன்னார்.''

''பைத்தியக்காரத்தனம். கிரஹங்கள், நட்சத்திரங்களின் சக்தியைக் காட்டிலும் என்னுடைய மந்திரசக்தி வலியது. அமைதி குடிகொண்டிருந்த கடலில் நான் மந்திரம் ஜபித்துச் சுழற்காற்றை வருவித்தேன் என்பது தங்களுக்குத் தெரியுமா? முதலில் அந்தக் காஞ்சி நகர் ஒற்றனும் அதை நம்பவில்லை. பிற்பாடு, கடலில் முழுகி உயிரை விடும் போது, கட்டாயம் நம்பியிருப்பான்!''

''அவன் கடலில் முழுகி இறந்ததை நீ பார்த்தாயா ?''

'' நான் பார்க்காவிட்டால் என்ன? அவன் இருந்த கப்பல் தீப்பிடித்து எரிந்ததைப் பார்த்தேன்.''

'' தீப்பிடித்த கப்பலிலிருந்து அவனைத் தப்புவிக்க இளவரசர் கடலில் குதித்துப் போனாராமே ?''

'' போனவர் திரும்பி வந்தாரா ?''

'' திரும்பிப் பல்லவனுடைய கப்பலுக்கு வரவில்லை....''

''பின்னே என்ன ? இரண்டு பகைவர்களும் ஒரே நாளில் பலியாவதற்காகவே வந்தியத்தேவனை உயிரோடு விட்டுவிட்டு வந்தேன்.''

''நீ என்னதான் சொன்னாலும் என் மனம் நம்பவில்லை. அவர்கள் இருவரும் இன்னும் உயிரோடிருப்பதாக என் மனத்துக்குள் ஏதோ சொல்லுகிறது. பூங்குழலியை உனக்குத் தெரியுமா ?''

''நன்றாய்த் தெரியும். இலங்கையில் அவள் எங்களுக்குத் தொல்லையாயிருந்தாள். அவளும் சுழற் காற்றில் போயிருக்கலாம்.''

'' அதுதான் இல்லை. சிறிது நேரத்துக்கு முன்பு ஒரு படகு தூரத்தில் வந்தது. கலங்கரை விளக்கின் உச்சியிலிருந்து ராக்கம்மாள் பார்த்தாளாம். திடீரென்று அது மறைந்து விட்டதாம். படகில் இரண்டு மூன்று பேர் இருந்ததாகத் தோன்றியதாம்.''

''அப்படியானால் தாங்கள் கிழவரை அழைத்துக் கொண்டு உடனே நடையைக் கட்டுங்கள். நான் இருந்து பார்த்துக் கொண்டு வருகிறேன்.''

''நாங்கள் இருந்தால் என்ன?''

''கிழவர் இருந்தால் இளவரசருக்கு இராஜ மரியாதைகள் செய்து அழைத்துக் கொண்டு போகப் பார்ப்பார். காரியமெல்லாம் கெட்டுப் போகும்.''

''மந்திரவாதி! நானும்தான் கேட்கிறேன். அவர்கள் இறக்க வேண்டிய அவசியம் என்ன? மதுராந்தகனுக்குப் பட்டம் கட்டிவிட எல்லாரும் சம்மதித்து விட்டால்.....''

''அம்மணி! பெண் புத்தியைக் காட்டிவிட வேண்டாம். காஞ்சி ஒற்றனுக்கு நம் இரகசியம் எல்லாம் தெரியும். அவன் இளவரசரிடமும் சொல்லியிருப்பான். பொழுது விடிவதற்குள் நீங்கள் புறப்பட்டுச் செல்லுங்கள். ராக்கம்மா ! பூங்குழலி அவர்களை அழைத்து வந்தால் காட்டில் எங்கே வைத்திருப்பாள்?''

''மறைந்த மண்டபம் ஒன்று இருக்கிறது. அதுதான் அவளுடைய அந்தரங்க வாசஸ்தலம். காஞ்சி ஒற்றனை அதிலேதான் ஒரு பகல் முழுதும்

# உங்களுக்கே... பருவ மங்கையின் பைந்தளிர் மேனியெழில்.

இளமை கொஞ்சிப் புதுமெருகு மிளிரும் எழிலுக்கே... ஜேய் அழகு சோப்! சரும நெகிழ்ச்சிக்கான எண்ணெய்கள் கொழித்திட, ஆழ ஊடுருவிச் சுத்தமிடும் அதன் மென்மை நுரை உங்கள் சருமத்திற்கு நேயமானது. விலை உள்ளளவும் எல்லை மீறிய செழிப்புடன் கமழும் அதன் மல்லிகை மணம் உங்களைக் கொள்ளைகொள்ளும். மறவாதீர்கள், நவீனமான உலோக ஜிகினாத் தாளுறை தரித்தது ஜேய் ஒன்றுதான.

ஜேய்-நீங்கள் நினைப்பதை விடக் குறைவான விலை உள்ள அதி விசேஷ அழகுசாதன சோப்!

உங்கள் எழில் பெருக

# ஜேய்

அழகு சோப்

உங்கள் மணங்கவர் மணங்கமழ்வது.




**டாடா**
**தயாரிப்பு**

Bensons13170 TM

## பாருங்கள்...வித்தியாசத்தை!

# வெண்மை பளிச்சிடச் செய்வதில் இணையற்றது டினோபால்

விளைவுகளே கூறுகின்றன! துவைத்த துணிகளை அலசுவதற்குமுன் வாளியிலுள்ள தண்ணீரில் சிறிதளவு டினோபால் சேர்க்கவும். பிறகு பாருங்கள், சலவையின் வெண்மை எப்படிப் பளிச்சிடுகிறது என்று சட்டை, புடவை, படுக்கை விரிப்பு, டவல் எல்லாமேதான்!

இத்தனைக்கும் ஆகும் செலவு, துணிக்கு ஒரு பைசாவுக்கும் குறைவு. டினோபால் வாங்குங்கள். ரெகுலர் பாக், எகானமி பாக் மற்றும் ஒரு வாளித் துணிக்கு ஒரு பாக்கெட் ஆகிய மூன்று அளவுகளில் கிடைக்கிறது.







டினோபால் என்ற பெயர் ஜே.ஆர்.கெய்கி எஸ்.ஏ. பாஸல் ஸ்விட்சர்லாந்து ஸ்தாபனத்தாரின் ரிஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க் ஆகும்.

சுஹ்ரித் கெய்கி லிமிடெட், த.பெ. 11050, பம்பாய்-20 BR.

Shilpi SGT-1A/68 Tan

மறைத்து வைத்திருந்தாள். பிறகு அதை நான் கண்டுபிடித்தேன்.''

''நல்லது; அந்த மறைந்த மண்டபம் இருக்குமிடம் எனக்கும் தெரியும். அங்கே போய்க் காத்திருக்கிறேன். ராணி! சக்கரவர்த்தி எப்படியிருக்கிறார்? ஏதாவது செய்தி உண்டா?''

''எந்தச் சக்கரவர்த்தியைப் பற்றிக் கேட்கிறாய்?''

''நோயாளி சுந்தரசோழனைச் 'சக்கரவர்த்தி' என்று இந்த வாய் ஒரு நாளும் சொல்லாது. 'நமது' சக்கரவர்த்தியைப் பற்றித்தான் கேட்கிறேன்.''

'' சௌக்கியமாயிருப்பதாகப் பத்து நாளைக்கு முன்பு செய்தி கிடைத்தது. ஆகா! எத்தனை நாள் ஆயிற்று, பார்த்து?''

''சரி, சரி! சீக்கிரம் புறப்படுங்கள். அந்த முட்டாள் பல்லவன் என்ன செய்யப் போகிறானாம்?''

'' அவனையும் தஞ்சைக்கு அழைத்துப் போகிறோம்.''

'' அவனிடம் ஜாக்கிரதையாயிருங்கள்.''

''அவனைப் பற்றிக் கவலை இல்லை. நான் காலால் இட்டதை அவன் தலையால் செய்யக் காத்திருக்கிறான்.''

''இருந்தாலும் ஜாக்கிரதையாயிருப்பது நல்லது. காஞ்சி ஒற்றன் வந்தியத்தேவனிடம் தாங்கள் கொஞ்சம் ஏமாந்து போனீர்கள் அல்லவா?''

''அது உண்மைதான்; அதனாலேயே அவனை உயிரோடு மறுபடியும் பார்க்க விரும்புகிறேன்.''

''அந்த ஆசையை அடியோடு விட்டு விடுங்கள், ராணி!''

இவ்வாறு பேசிக் கொண்டே அவர்கள் அங்கிருந்து நகரத் தொடங்கினார்கள் என்று தெரிந்தது. பூங்குழலி தன்னை அவர்கள் பார்க்காத வண்ணம் இன்னும் நன்றாய்ப் புதரில் மறைந்து கொண்டாள். நல்ல வேளையாக, அவள் இருந்த பக்கம் அவர்கள் வரவில்லை. வேறு திசையாகச் சென்று விட்டார்கள்.

பூங்குழலி தற்செயலாக ஒட்டுக் கேட்ட விஷயங்கள் அவளுக்குப் பெருந் திகிலை உண்டு பண்ணி விட்டன. பொன்னியின் செல்வரை எத்தனைவித அபாயங்கள் சூழ்ந்திருக்கின்றன என்பதை எண்ணிய போது அவளுடைய கை கால்கள் நடுங்கின. கண்கள் இருண்டன. தொண்டை வறண்டது. உள்ளம் குழம்பியது. தான் விட்டு விட்டு வந்த படகை உடனே போய்ச் சேர வேண்டும் என்ற எண்ணம் மட்டும் வலியதாக முன் நின்றது.

---

**இது ஆப்பிரிக்கக் குழந்தை**

—சரி, மற்றக் குழந்தைகளில் இத்தாலிய, தென் அமெரிக்க, பிரிட்டிஷ், சீன, ஜப்பானியக் குழந்தைகளைக் கண்டுபிடிக்க முடியுமா? (22ம் பக்கம் பார்க்க)








படகை விட்டு வந்த திசையை நோக்கி விரைந்து சென்றாள்.

இளவரசர் கொடிய விஷ சுரத்தினால் பீடிக்கப்பட்டிருந்தார். அவரைச் சிறைப்படுத்திப் போவதற்குப் பழுவேட்டரையர் காத்திருந்தார். அவரைக் கொன்று விடுவதற்குக் கொலையாளிகள் காத்திருந்தனர். அவர்களுக்குத் துணையாக இந்தப் பெண்ணுருக் கொண்ட மோகினிப் பிசாசு இருந்தது. பார்த்திபேந்திரனும் அவளுடைய மாய வலையில் விழ்ந்து விட்டான். இளவரசரைத் தான் அழைத்துச் சென்று பத்திரமாய் வைத்திருக்கலாம் என்று எண்ணிய மறைந்த மண்டபம்கூட இவர்களுக்குத் தெரிந்திருக்கிறது.

இவ்வளவு அபாயங்களிலிருந்தும் இளவரசரைப் பாதுகாக்கும் பொறுப்பு தன் தலையில் சுமத்திருப்பதாகப் பூங்குழலி உணர்ந்தாள். ஆகையினாலேயே அவளுடைய மூளை குழம்பிற்று. இதுகாறும் அவளுடைய வாழ்நாளில் என்றுமில்லாத ஓர் அநுபவமும் நேர்ந்தது. அதாவது காட்டில் வழி தவறிவிட்டோமோ என்ற பீதி உண்டாயிற்று. சுற்றிச் சுற்றிப் புறப்பட்ட இடத்துக்கே வந்து கொண்டிருக்கிறோமோ என்ற எண்ணம் தோன்றியது. அப்படிச் சுற்றி வரும் போது இளவரசரின் எதிரிகள் யாரேனும் எதிர்ப்பட்டு விட்டால் என்ன செய்வது ? அவர்களுக்கு என்ன சமாதானம் சொல்வது ? எப்படி அவர்களிடமிருந்து தப்பித்துச் செல்வது ?....

இல்லை, இல்லை ! சரியான வழியிலே தான் வந்திருக்கிறோம். இதோ கால்வாய் தெரிகிறது. படகை விட்டு வந்த இடம் அதோ அந்த மூலையில் இருக்கிறது..... பூங்குழலி அவ்விடத்தை நோக்கிப் பாய்ந்து ஓடினாள். அவளுடைய நெஞ்சு அடித்துக் கொள்ளாமல் நின்றுவிட்டது. ஏனெனில், அவள் விட்டிருந்த இடத்தில் படகைக் காணவில்லை ! ஐயோ ! படகு எங்கே போயிருக்கும் ?

ஒருவேளை தான் இல்லாத சமயத்தில் பழுவேட்டரையரின் ஆட்கள் இங்கேயும் வந்திருப்பார்களோ? வந்து இளவரசரையும் வந்தியத்தேவனையும் சிறைப் பிடித்துக் கொண்டு போயிருப்பார்களோ ? அப்படி நடந்திருந்தால்கூடப் பாதகமில்லை. அதைவிடப் பயங்கரமான சம்பவம் நிகழ்ந்திருக்குமோ ? வந்தியத்தேவன் இளவரசரைத் தூக்கிக்கொண்டு மறைந்த மண்டபத்தைத் தேடிப் போயிருப்பானோ ? அப்படியானால் அங்கே கொலைஞர்கள் காத்திருப்பார்களே ? அடடா ! என்ன தவறு செய்து விட்டோம் ?....

அந்த மறைந்த மண்டபத்துக்கு உடனே போய்ப் பார்க்க வேண்டுமென்ற பரபரப்பு பூங்குழலியின் மனத்தில் குடிகொண்டது. காட்டு வழியில் ஓட்டம் பிடித்து ஓடினாள். மறுபடியும் அந்தப் பழைய சந்தேகம் ; வழி தவறிவிட்டோமோ என்ற சந்தேகம். சுற்றிச் சுற்றி வருகிறோமோ என்ற மயக்கம்.

அது என்ன? ஐயோ! அது என்ன? ஏதோ காலடிச் சத்தம் போலிருக்கிறதே? யாரோ நம்மைத் தொடர்ந்து வருவது போலிருக்கிறதே ? யாராயிருக்கும் ? எதற்காக இருக்கும் ? ஒருவேளை அந்தப் பயங்கரமான மந்திரவாதிதானோ? அப்படியானால் ஏன் பயப்பட வேண்டும்? இடுப்பில் செருகியுள்ள கத்தியை எடுத்துக் கொண்டால் போயிற்று ! யாராயிருந்தால்தான் என்ன ? எதற்காக ஓட வேண்டும்?....

இல்லை, இல்லை ! ஓட வேண்டியது தான். இச்சமயம் யாருடனும் சண்டை பிடிக்கும் சமயம் அன்று. கையில் வலிவு இல்லை. கத்தியும் குறி தவறிப் போகும். உயிரை எப்பாடுபட்டாவது காப்பாற்றிக் கொள்ள வேண்டும். நமக்கு இத்தருணம் ஏதேனும் வந்தால் இளவரசருடைய கதி யாதாகும்? முன்னமே அந்த வந்தியத்தேவன் எச்சரித்தானே ? உயிரைப் பத்திரமாய்க் காப்பாற்றிக் கொண்டு வருவதாகச் சொன்னோமே? அதை நிறைவேற்ற வேண்டியதுதான் !

பூங்குழலி மேலும் மேலும் நெருக்கமான காட்டில் புகுந்து ஓடினாள். ஆனால் துரத்தி வந்தவன் மேலும் பின் தொடர்ந்து வந்து கொண்டிருந்தான். பூங்குழலி போன வழியில் மரங்களிலிருந்த பட்சிகள் அலறிப் புடைத்துக் கொண்டு ஓடின. வளைகளிலிருந்து நரிகள் கிளம்பி ஓடின. தூங்கிய காட்டுப் பன்றிகள் விழித்தெழுந்து விழுந்தடித்து ஓடின. மான் ஒன்று விர்ரென்று பாய்ந்து வந்து அவள் மேலேயே இடித்துப் புடைத்துக் கொண்டு ஓடியது. இவ்வளவுக்கும் மத்தியில் பின்னால் தொடர்ந்து வந்தவன் விட்டபாடாக இல்லை. அவனுடைய காலடிச் சத்தமும், அவன் ஓடியதால் பெருமூச்சு விடும் சத்தமும் கேட்டுக் கொண்டேயிருந்தன.

பூங்குழலி ஓடி ஓடிச் சலித்துப் போனாள். அந்தச் சலிப்பு அளவில்லாத கோபமாக மாறியது. வருகிறவன் யாராயிருந்தாலும் அவனை ஒரு கை பார்த்து விடுவது என்று முடிவு செய்தாள்.

**(தொடரும்)**

ASP/L-50



# நெருங்கி உறவாடும்,

## நெஞ்சைக் கவரும் நறுமணமுள்ள

# லக்மே டால்கம்

உங்கள் இதயம் கவரும் நறுமணத்தை மணிக் கணக்கில் வீசிக்கொண்டிருக்கும் டால்கம்—நெஞ்சை விட்டகலாத லக்மே! அந்த இணையற்ற இன்பத்தை அனுபவிக்கத் தாமதமேன்? இன்றே உங்கள் மேனியின் மீது இன்மணம் கமழும் லக்மே டால்கம் தூவுங்கள். அது பட்டுப் போன்று மென்மையானது; கோர்த்தியானது; இணைபிரியாதது. ஒரு நவீன 'லக்மே' சுகமாகத் துவக்க, இதை விட இன்பம் தருவது வேறென்ன இருக்கப் போகிறது?

இது ஐவகை மணம் வீசி, உங்களை அன்புடன் அணைய வருகிறது. லேவெண்டர், வெட்டிவேர், ஜிவான், சந்தனம் ஆகிய நான்கும், மீடியம் மற்றும் எகானமி சைஸ்களிலே வருகின்றன. ஐந்தாவதான ஃப்ளோரல் மிஸ்ட் பெரிய ஃபேமிலி சைஸில் வருகிறது. எல்லாமே நீங்கள் எளிதில் வாங்கக்கூடிய விலையில்; எல்லாமே இன்ப மணம்; எல்லாமே இன்ப மயம்!






# 35. பரதனுடைய உறுதி

பரதன் வந்து விட்டான் என்கிற சமாசாரம் அந்தப்புரமெல்லாம் பரவி விட்டது. தன் துக்கத்தைத் தீர்த்துக் கொள்ள வழி தெரியாமல் தவித்துக் கொண்டிருந்த கௌசல்யை இதைக் கேட்டதும், ''பரதனிடம் போகலாம், வா!'' என்று சுமித்திரையையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டாள். அவர்கள் இரண்டு அடிகூட எடுத்து வைத்திருக்க மாட்டார்கள். அதற்குள் பரதனே உன்மத்த கோலத்தில் ராமனுடைய தாயிடம் சரணம் அடைய வந்து விட்டான்.

கௌசல்யை எண்ணினாள்: ராஜ்யம் எளிதில் தனக்குக் கிடைத்துவிட்ட களிப்பில் மூழ்கி, பட்டாபிஷேகம் செய்து கொள்ளப் பரதன் அவசரமாகக் கேகய நாட்டிலிருந்து வந்து விட்டான் என்று. எவ்வளவு பிசகு!

வசிஷ்டர் தலைமையில் மந்திரிகளும் பெரியோர்களும் சபை கூடி, இறந்து போன மன்னனுக்குப் பரதனைக் கொண்டு உத்தரக் கிரியைகளை நடத்தி விட்டு அவனுக்குப் பட்டாபிஷேகம் செய்துவிட வேண்டுமென்று முடிவு செய்திருந்தார்கள் அல்லவா? ஆகையால் பரதனைக் கண்டதும் வீர புருஷனையும் அருமை மகனையும் இழந்த கௌசல்யை தீனஸ்வரத்தில் இவ்வாறு சொன்னாள்:

''பரதனே! யாதொரு இடையூறும் பயமும் இல்லாமல் நீ ஏற்கக்கூடிய ராஜ்ய பதவி உனக்காக இதோ காத்திருக்கிறது. கைகேயி சம்பாதித்து உனக்குத் தந்திருக்கிறாள். பெற்றுக்கொண்டு சுகமாக ஆள்வாயாக. தந்தைக்காக நீ மூட்டும் தீயில் நானும் விழுந்து மன்னன் சென்ற உலகத்துக்குப் போய் விடுகிறேன்'' என்றாள்.

கொடிய விஷம் போன்ற இந்த மொழிகளைக் கேட்ட பரதன் கீழே விழுந்து அவள் பாதங்களைப் பிடித்துக் கொண்டு பேச முடியாதவனாகக் கிடந்தான்.

''பரதனே! நீயே என்னை அழைத்துப் போய் என் வீர குமாரன் எங்கே தவ வாழ்க்கை நடத்துகிறானோ, அங்கே கொண்டு போய் விட்டுவிடு'' என்றாள் கௌசல்யை.

தாய் கௌசல்யையின் கொடிய மொழிகளைக் கேட்டு வேதனை தாங்காமல் மூர்ச்சையடைந்த பரதன் சற்று நேரம் கழித்துக் கொஞ்சம் தெளிந்ததும் எழுந்து, ''தாயே! ஒரு பாவமும் அறியாத என்னை ஏன் இப்படியெல்லாம் துன்பப்படுத்துகிறாய்? வெகு தூரத்தில் ஒரு விஷயமும் தெரியாதவனாக இருந்தேன் என்பது உனக்குத் தெரியாதா? இங்கே நடந்த சூழ்ச்சியும் பாவமும் எனக்கு ஏதும் தெரியாது. அண்ணன் ராமனிடம் நான் வைத்துள்ள அன்பு உனக்குத் தெரியாதா? இந்தக் கொடுமையை நான் அவனுக்குச் செய்திருப்பேனா? இது உனக்குத் தெரியாதா? நான் அடைந்த சகல அறிவும், பெற்ற ஞான

சம்பத்தும் எல்லாம் நாசமாகப் போகட்டும். இந்தத் தீச் செயலில் எள்ளளவாவது எனக்குப் பங்கிருக்குமானுல் உலகத்தில் யார் எந்தப் பெரும் பாவம் செய்து அதன் பயனை அநுபவிக்கிறார்களோ, அந்தப் பாவமும் கர்ம பலனும் எனக்கு வந்து சேரட்டும். சத்தியம் செய்கிறேன், தாயே! ஒரு நாளும் இந்த விஷயத்தில் நான் கலந்தவன் அல்ல; ஆசைப்பட்டவன் அல்ல!'' என்றான்.

இரு கைகளையும் உயரத் தூக்கித் துஷ்ட மனிதன் செய்யக் கூடிய சகல வித பாவங்களையும் ஒன்றன்பின் ஒன்றாகக் கூறி, அந்தப் பாவம் தன் மேல் விடியக் கடவது, இந்தச் சூழ்ச்சிக்குத் தான் சம்மதித்திருந்தால் என்று கோர சபதம் செய்தான்.

தன்னைப் பெற்ற தாய் செய்த சூழ்ச்சியின் பயனைப் பெரிய லாபத்தைப் பெற்ற ஒரு மகன் தனக்கு ஒன்றுமே தெரியாது என்று நிரூபிப்பது அந்தக் காலத்திலும் கடினமாகத்தான் இருந்தது. இந்த நிலையில் அப்பாவியான பரதன் சபதங்கள் செய்து அலறி அலறி அழுதான். அரசு இழப்பதை விடவும் வனம் போவதைவிடவும் இவ்வளவு நாட்கள் பிரியமாயிருந்த தாயான கௌசல்யை சாட்டிய பழி, குற்றமற்ற பரதனுக்குப் பயங்கர நரக வேதனையைத் தந்தது. ராமனுக்குச் செய்யப்பட்ட அநீதியினால் ராமன் துக்கப்படவில்லை. பரதனுக்குச் செய்த அநீதி மிகப் பெரியது.

பரதனுடைய உள்ளத்தை இப்போது கௌசல்யை கண்டாள். தான் எண்ணியது தவறு என்று உணர்ந்தாள். தன் மடியின் மீது அவன் தலையை எடுத்து வைத்து, ''அன்புக்குரிய மகனே! உன் தூய உள்ளத்தில் உண்டாகியிருக்கும் துக்கத்தைப் பார்த்து என் சோகம் இரு மடங்காகப் பொங்குகிறது. நாம் என்ன செய்ய முடியும், குழந்தாய்? விதியின் வசப்பட்டவர்களாக இருக்கிறோம். புண்ணியவான்களுக்குரிய பதவிகளெல்லாம் உனக்கு இந்த உலகத்திலும் மேலுலகத்திலும் உண்டாகக் கடவது'' என்று ஆசிர்வதித்து ஆறுதல் அடைந்தாள்.

முதலில் சந்தேகப்பட்டாள்—சூழ்ச்சியில் பரதனும் கலந்திருப்பான் என்று அல்ல — பரதனுடைய மனத்தில் ஆசையிருந்திருக்கும், அதை அடைந்ததில் பரதனுக்குத் திருப்தி இருக்கும் என்று. பின்னர் பரதனுடைய உள்ளத்தின் கல்மஷமற்ற பான்மையைக் கண்டு இரு மடங்கு திருப்தி அடைந்தாள். ஒரு மகன் காட்டுக்குப் போனாலும் இத்தகைய ஒரு மகன் கிடைத்தான் என்று மகிழ்ச்சி யடைந்தாள். இந்த இடத்தில் கம்பர் மிக அழகாகச் சொல்லுகிறார் :

**தூய வாசகம் சொன்ன தோன்றலை**
**தீய கானகம் திருவின் நீங்கி, முன்**
**போயி னுன்தன்முன் போந்து வான்என**
**ஆய காதலால் அழுது புல்லினுள்.**

பட்டத்திலிருந்து நீக்கப்பட்டு, காட்டுக்குப் போன ராமனே திரும்பி வந்து அவனைக் கட்டித் தழுவிக் கொள்வதாகவே எண்ணிக் கோசலை பரதனை எடுத்து, ஆனந்தக் கண்ணீர் விட்டு, அணைத்துக் கொண்டாள்.

மக்களின் உள்ளத்தில் ஏற்படும் பலவித உணர்ச்சிகளைக் கவிஞர்கள் தான் காண்பார்கள். அவற்றைப் பளிச்சென்று காண்பிக்கத் தகுந்த மொழிகளையும் அவர்கள்தான் காண்பார்கள்.

''உன் முன்னோர்கள் பலர் அரசு புரிந்து பெரும் புகழ் பெற்றிருக்கிறார்கள். ஆனால், அரசு வேண்டாம் என்று சொல்லும் உனக்குச் சமான மானவர் அவர்களில் ஒருவருமே இல்லை. நீதான் மன்னர்களுக்குள் மன்னன், பரதனே!'' என்று சொல்லிக் கோசலை விம்மி விம்மி அழுதாள்.

**''முன்னை நும்குல முதலுளோர்கள்தாம்**
**நின்னை யாவரே நிகர்க்கும் நீர்மையார்?**
**மன்னர் மன்னவா!' என்று வாழ்த்தினள்**
**உன்ன உன்னநைந்(து) உருகி விம்முவாள்.''**

கம்பர் கண்ட கோசலையும் பரதனும் பாரத நாட்டு மக்களின் உள்ளத்தில் என்றென்றும் நிலைத்து வாழ்க! அந்தப் பண்பும் நீடூழி வாழ்க!

* * *

இறந்து போன மன்னனுக்கு வழக்கப்படி செய்ய வேண்டிய உத்தரக் கிரியைகள் கிரமமாகச் செய்து முடித்தார்கள். ஆறாத துக்கத்தில் மூழ்கிய பரத சத்ருக்னர்களை வசிஷ்டர் முதலான அறிஞர்கள் சமாதானப்படுத்திக் கொண்டு வந்தார்கள்.

மன்னன் இறந்த பதினான்காவது நாள் மந்திரிகள் முதலியவர்கள் சபை கூட்டிப் பரதனை வணங்கி, ''நம்முடைய பெருந்தகை மன்னன் சுவர்க்கம் சென்று விட்டான். ராம லக்ஷ்மணர்கள் ராஜ்யத்தை விட்டு விட்டுப் போய் வனத்தில் இருக்கிறார்கள். நாயகனற்ற இந்த ராஜ்யத்தின் தலைமையை இந்தச் சந்தர்ப்பத்தில் தாங்கள் ஏற்றுக் கொள்வதில் தவறு ஒன்றுமில்லை. ஆகவே, ஒப்புக் கொண்டு

**குழந்தைகளுக்கு - விடை**

1. ஜப்பான்
2. சீனு
3. தென் அமெரிக்கா
4. இத்தாலி
5. பிரிட்டன் —'பாபு'

எங்கள் அரசனுகப் புகழ் பெற்று விளங்குவீராக ! மகுடாபிஷேகத்துக்கு வேண்டிய எல்லா மங்களப் பொருள் களைச் சேர்த்து வைத்தும், மற்ற சகல ஏற்பாடுகள் செய்தும், நகரத்துப் பிர முகர்களும் ராஜ குலத்தவர்களும் காத்திருக்கிறார்கள். ராஜ்யத்தை ஏற் றுக் கொள்வீராக. இது உம்முடைய முன்னேர்களின் ராஜ்யம். அபிஷேகம் செய்து கொண்டு எங்களைக் காப் பாற்றுவீராக'' என்றார்கள்.

இதைக் கேட்ட பரதன் பட்டாபி ஷேகத்துக்காக வைக்கப் பட்டிருந்த சாமக்கிரியைகளை யெல்லாம் வலம் செய்து கைகூப்பி வணங்கி விட்டு, அவ்விடம் கூடியிருந்த மகாஜனங்களுக் குச் சொன்னான் :

''மூத்த குமாரனுக்கு உரிமையான ராஜ்யத்தை என்னை ஒப்புக் கொள்ளும் படி குல வழக்கத்துக்கு விரோதமாக நீங்கள் விரும்புவது நியாயமில்லை. உங்களுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகுக. ராமச்சந்திரன் எனக்கு மூத்தவன். அவன் இருக்கும் ஆரண் யத்துக்கு நான் சென்று அவனுக்கு அங்கேயே ராஜ்யாபிஷேகம் செய்து வைத்து, ராமலக்ஷ்மணர்களை அயோத் தியைக்கு அழைத்து வரத் தீர்மானித் திருக்கிறேன். இதற்கு வேண்டிய பரி வாரங்களைத் திரட்டி எல்லா ஏற்பாடு களையும் செய்வீர்களாக. இவ்விட மிருந்து வனத்துக்குப் போகப் பாதை சீராக அமைக்க வேண்டும். எல்லாத் தொழிலாளர்களையும் திரட்டுங்கள். நான் அபிஷேகம் செய்து கொள்ளமாட் டேன். இது என் பிரதிக்ஞை'' என்றான்.

ராஜகுமாரன் சொன்னதைக் கேட்டு, சபையில் கூடியிருந்தவர்கள் எல்லாரும் தங்களையும் அறியாமல் பெருமகிழ்ச்சி யடைந்து ஆரவாரம் செய்தார்கள்.

எல்லாரும் பரதனுடைய யோச னையை ஒப்புக் கொண்டு பெரும் படை பரிவாரத்தோடு ராஜகுமாரன், வனம் சென்று ராமனைச் சந்திக்க எல்லா ஏற் பாடுகளும் செய்தார்கள்.

**வ**னப் பிரதேசத்தை நன்றாய் அறிந் தவர்கள், கிணறு வாய்க்கால் வெட்டு கிறவர்கள், சுரங்கம் போடுகிறவர்கள், தெப்பம் படகு முதலியவற்றைக் கட்டத் தெரிந்தவர்கள், கல் தச் சர்கள், யந்திரம் செய்பவர்கள், சீக் கிரமாகப் பெரு மரங்களை வெட்டத் தெரிந்தவர்கள், மேடு பள்ளங்களை ஒழுங்குபடுத்தத் தெரிந்தவர்கள், கண் ணும்பு வேலைக்காரர்கள், காட்டு வழியில் செல்லப் பயிற்சிபெற்றவர்கள், இன்னும் இத்தகையோர் பலரும் கூடிய ஒரு பெரிய தொழிலாளர் கூட்டம் வேண் டிய ஆயுதங்களோடு முன்னால் சென்று எல்லா வேலைகளும் துரிதமாகச் செய் தார்கள். 'ராமனை அழைத்து வரு வோம்' என்று எல்லா வேலையாட் களுக்கும் உற்சாகம். வெகுவேகமாகப் பாலங்கள் கட்டப்பட்டு வந்தன. மரங்கள் வெட்டப்பட்டன. வெகு துரிதமாகச் சேனையோடு ராஜகுமாரன் போவதற்குத் தகுந்த பாதை அமைக் கப்பட்டது. அங்கங்கே மேடு பள்ளம் சமப்படுத்தி, ஈரப் பிரதேசங்களில் ஜலம் வற்ற வெட்டிவிட்டு, வழியில் பெரும் படை தங்குவதற்கு விடுதி களும் குடிக்கும் தண்ணீர் வசதிகளும் எல்லாவித சௌகரியங்களும் செய்து விட்டார்கள்.

**இ**வ்விதம் வனம் செல்ல எல்லா ஏற்பாடுகளும் பரதன் சொல்லியபடி நடந்து கொண்டிருந்தாலும், வசிஷ்ட ரும் மந்திரிகளும் முறைப்படி பெரிய மந்திரி சபை கூட்டினார்கள். கூட்டி, பரதனுடைய மாளிகைக்குத் தூதர் களை அனுப்பி அவனை அழைத் தார்கள். அழைப்புக்கு வந்த பரிவாரத் தின் நாத கோஷங்களைக் கேட்டுப் பரதன் மிகவும் வருந்தினான். ''அதை நிறுத்துங்கள்'' என்று சொல்லியனுப்பி விட்டு, தம்பி சத்ருக்னனைப் பார்த்து, ''ராஜ்யம் வேண்டாம் என்று சொல்லி விட்ட என்னை இவ்விதம் துன்புறுத்து கிறார்களே ! தாய் செய்த சூழ்ச்சியின் பயனைப் பார் ! இந்தப் பழியைச் சுமக்க என்னைத் தனியே விட்டு விட்டுத் தந்தை தசரதர் சொர்க்கம் போய் விட்டாரே. இந்த ராஜ்யம் அரசனில்லாமல் தவிக்கிறது. மாலுமி யில்லாத கப்பலைப் போல் அலைந்து ஆடுகிறது'' என்று சொல்லித் துக்கப் பட்டான்.

களங்கமற்ற பரதன் வருகிறான் என்று மிக்க ஆவலுடனும் சந்தோஷ ஆரவாரத்துடனும் சபையில் எல்லாரும் வாயிலைப் பார்த்தவண்ணமாக இருந் தார்கள். சந்திரோதயமானாற் போல்

பரதன் சபையில் பிரவேசித்தான். கூடியிருந்த பெரியோர்களை நமஸ்கரித்து, பரதன் தனது ஆசனத்தில் போய் அமர்ந்தான்.

''மேன்மை பெற்ற மகாராஜாவான தந்தையும் உங்கள் சகோதரன் ராமச்சந்திரனும் உங்களுக்கென்று தந்திருக்கும் ராஜ்யத்தை ஒப்புக் கொண்டு முறைப்படி எங்களை ரட்சிப்பீர்களாக'' என்று வசிஷ்டர் சொன்னதைக் கேட்டதும், பரதன் உள்ளம் ராமனிருக்குமிடம் சென்றுவிட்டது. அவன் கண்களினின்று கண்ணீர் பெருகிற்று.

வாலிபனான பரதன் சபை நடுவில் உரக்க அழுதுவிட்டு வசிஷ்டரைப் பார்த்து நிந்தித்துப் பேசினான் :

''நான் நல்ல முறையில் வளர்க்கப்பட்டவன். குலத்துக்குரிய பண்பாட்டையும் பெற்றவன். எனக்கு உரிமையற்ற பொருளை நான் எப்படி அபகரிப்பேன்? தகாத காரியத்தைச் செய்யச் சொல்லுகிறீர்களே? இது வியப்பாக இருக்கிறது. தசரதனுடைய புத்திரன் ஒருவன் இதைச் செய்ய ஒப்புக் கொள்வானா? இந்த ராஜ்யம் ராமனுடையது. மூத்தவன், மேலானவன், தர்மாத்மா. திலீபன், நஹுஷன் ஆகியவர்களுக்குச் சமமானவன். அவனல்லவோ இந்த ராஜ்யத்துக்கு உரிய அரசன்? ஆரியனுக்குத் தகாத ஒரு காரியத்தை என்னைச் செய்யச் சொல்வது சரியல்ல. இங்கிருந்து வனத்தில் இருக்கும் ராமனுக்குக் கைகூப்பி வணங்குகிறேன். அவனே அரசன். அவனே அரசனாகத் தக்கவன். நானல்ல!''

இந்தப் பேச்சைக் கேட்ட சபையோர் இவனல்லவோ பெருந்தகை என்று ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார்கள்.

மீண்டும் பரதன் சொன்னான்: ''அரசனான ராமனை என் பேச்சால் சம்மதிக்கும்படி செய்ய முடியாவிட்டால், நான் அங்கேயே வனத்திலிருந்து தவம் இருப்பேன். நீங்கள் பெரியோர்கள் எல்லோரும் எப்படியோ சகல உபாயங்களையும் உபயோகித்துப் பலவந்தமாக வேனும் ராமனை அயோத்திக்குக் கொண்டு வந்து பட்டம் சூட்ட வேண்டியது உங்கள் கடமை.''

இப்படிச் சொல்லிவிட்டு அருகிலிருந்த சுமந்திரனைப் பார்த்து வனம் போவதற்குத் துரிதமாக எல்லா ஏற்பாடுகளும் செய்யும்படி கட்டளையிட்டான். நகரமெல்லாம் ஆரவாரித்து மகிழ்ந்தது. ராமன் வந்தேவிட்டான் என்ற உணர்ச்சி பெற்று மகிழ்ந்தார்கள். பரதன் எப்படியாவது ராமனை அழைத்து வருவான் என்று நம்பினார்கள். (தொடரும்)




அமெரிக்காவின் ஜனாதிபதியாக இருந்த ட்ருமன், ஐரோப்பிய நாடு ஒன்றுக்குச் சுற்றுப் பயணம் சென்றிருந்தார். அவருக்குப் பின்னால் போலீஸ் பாராவும் சென்று கொண்டிருந்தது.

அப்போது மிகவும் வேகமாகச் சென்று கொண்டிருந்த கார் ஒன்று ட்ருமனின் கார் ஓரமாக நின்றது.

காரிலிருந்த ட்ருமன் எட்டிப் பார்த்து, "என்ன விஷயம்?" என்று கேட்டார்.

"என்ன விஷயமா? உனக்கு எந்த ஊர்? உன் பின்னால் போலீஸ் படை உன்னைத் துரத்திக்கொண்டு வருகிறது! ஜாக்கிரதை!" என்றான் நின்ற காரிலிருந்த ஒருவன்!

# கண்ணுங்கருத்துமாக குழந்தைகளைப் பேணும் தாய்மார்களுக்கு




தாயன்பைப் போலத் தூய்மையானது ஆஸ்டர்மில்க். ஜீரணிக்கச் சுலபமானது. எனவே இதிலுள்ள வைட்டமின்களும், இரும்புச் சத்தும் புரதமும், உடலில் பொருந்தி, பயனளிக்கின்றன. இவை குழந்தையின் தேவைகளுக்கேற்ற அளவுகளில் அடங்கியுள்ளன.

ஒப்பற்ற ஆஸ்டர்மில்க் உலகெங்கும் விவேகமுள்ள தாய்மார்களின் தேர்வு—உங்களைப் போன்ற தாய்மார்களின் தேர்வு.

# ஆஸ்டர்மில்க்

*உலகெங்கும் மிகநம்பகமான பாலுணவு*

ஒரு
**க்ளாக்ஸோ**
தயாரிப்பு

*Creative Unit-218*



# ரகுபதி ராகவ

மகாத்மா காந்தி

தமிழாக்கம்:
ராஜாஜி

## 7. ஒரு மெய்ப்பொருள் பல ரூபங்கள்

கொள்கையில் நான் ஒரு அத்வைதி என்று என்னைப் பற்றிச் சொல்லலாம். ஆயினும் நான் த்வைத மார்க்கமும் சரியே என்பேன். அத்வைதிகள் பிரபஞ்சத்தை மாயை என்பார்கள். ஒவ்வொரு கணமும் பிரபஞ்சம் மாறி மாறி வருகிறது. இப்படி வேறுபட்டு வேறுபட்டு வரும் பிரபஞ்சத்தை நிலையில்லாத பொருள் என்றுதான் சொல்ல வேண்டும். எனினும் மாறுபட்டு வரும் நிலையில் மாறுபடாத ஒரு சத்து இருந்தே வருகிறது. ஆனபடியால் பிரபஞ்சத்தைப் பொய் என்று சொல்வதற்கும் இல்லை. உலகம் பொய்யும் மெய்யும் இரண்டுமே என்பேன்.

பண்டிதர்கள் 'இவன் ஓர் அநேகாந்தவாதி, அதாவது ஒரு நிச்சயமான முடிவு இவனுக்கு இல்லை' என்று என்னைக் குறை கூறலாம். ''இப்படி இருக்குமானால் ஒரு முடிவு; அப்படி இருக்குமானால் மற்றொரு முடிவு'' என்று ஒருவன் வாதித்தால் அவனைப் புலவர்கள் 'ஸ்யாத்'வாதி என்று பெயரிட்டு இருக்கிறார்கள் ('ஸ்யாத்' என்பது இப்படியானால், அப்படியானால் என்று வாதத்துக்காக ஒன்றை ஒப்புக் கொள்ளும்போது வழங்கப்படும் ஒரு வடமொழி இடைச் சொல்.) என்னுடைய ஸ்யாத் வாதம் இந்தப் புலவர்கள் சொல்லும் ஸ்யாத் வாதம் அல்ல, என் கொள்கை ஒரு தனி ஸ்யாத் வாதம்.

என்னால் புலவர்களோடு ஸம்வாதம் செய்ய முடியாது. என்னுடைய நீண்ட அநுபவத்தில் நான் கண்டது என்னவென்றால், என்னுடைய திருஷ்டி முனையிலிருந்து பார்த்தால் நான் சொல்வது முற்றிலும் நியாயமே யாகும். ஆனால் என்னோடு வாதம் செய்பவர்களின் நோக்கில் நான் சொல்வது தவறு என்றே படும். ஒரே பொருளை இருவர் ஆராயும்போது, ஒரே விஷயம் இரு பட்சத்திலிருந்தும் இரு விதமாகத் தோன்றும். இரு பாலாருடைய அபிப்பிராயமும் சரியே என்று சொல்லவேண்டியதாகிறது. குருடர்கள் ஏழு பேர்கள் யானையைக் காணப் போன கதை தெரியுமே! ஒவ்வொருவனுக்கும் ஒவ்வொரு



விதமாக ஏழு விதமாகப் புலனாயிற்று அல்லவா! ஏழு பேர்கள் கண்டதும் உண்மையே. ஏழு பேர்கள் கண்டதும் தவறே. அதைப் போலவே பிரபஞ்ச ரகசியமும். அவரவர்களுடைய பார்வையைப் பொறுத்து ஒரு மெய்ப்பொருளானது அநேக ரூபங்களாகக் காணப்படுகிறது. இந்த உண்மையை நான் அறிந்திருப்பதனாலேதான் முஸல்மான்களும் கிறிஸ்தவர்களும் நம்மைப் போலவே உண்மை மார்க்கத்திலேதான் இருக்கிறார்கள் என்பேன்.

முந்தி யெல்லாம் என் அபிப்பிராயத்திலிருந்து வேறுபட்டவர்களைக் கண்டு நான் வருத்தம் அடைவேன். இப்போது அவ்வாறில்லை. அவர்கள் பார்வையைக் கொண்டே என்னையும் அவர்களையும் நோக்கும் அறிவு எனக்கு வந்திருக்கிறது. ஆனபடியால் என் அபிப்பிராயத்துக்கு மாறுபட்டவர்களிடம் அன்பு செலுத்த என்னால் முடிகிறது. உலகம் முழுவதையும் என் அன்புப் பசிக்கு உணவாக்க ஆசைப்படுகிறேன். என்னுடைய அநேகாந்த வாதமானது சத்தியம் அஹிம்ஸை என்ற இரட்டைக் கொள்கையிலிருந்து தோன்றியதாகும்.





# கடவுளின் ஊழியர் கஃபார்கான்

கே. எஸ். ஜம்புநாதன்

'அஹிம்ஸை கோழையின் ஆயுதமல்ல: வீரனுக்கு வலிமையூட்டும் சிறந்த ஆயுதம்' என்று காந்திஜி அடிக்கடி சொல்வதுண்டு. பழிக்குப் பழி, இரத்தத்துக்கு இரத்தம் என்ற சொற்களைத் தலைமுறை தலைமுறையாகக் கடைப்பிடித்து வந்த வீர பட்டாணியர்களைத் தலைசிறந்த அஹிம்ஸா வீரர்களாக மாற்றி காந்திஜியின் கூற்றை மெய்ப்பித்தவர் 'பாத்ஷாகான்' என்றும் 'எல்லைப்புற காந்தி' என்றும் மக்களால் அன்புடன் அழைக்கப் படும் கான் அப்துல் கஃபார்கான் ஆவார். பெஷாவர் மாவட்டத்தில் உள்ள உத்மான் ஸாய் இராமத்தின் குலத் தலைவரும் தனவந் தருமான கான் ஸாகேப் பெராம் கானுக்குப் பிறந்த பாத்ஷாகான் ஆஜானுபாகுவான தோற்றமுடையவர் என்றாலும் சாந்தமே உருவானவர்; சிறந்த சமயப் பற்றுள்ளவர்.



## இளமைப் பருவம்

பள்ளிப் படிப்பு முடிந்ததும் பாத்ஷா கான் ராணுவத்தில் சேர்ந்து பணியாற்ற வேண்டும் என்று ஆசைப்பட்டார். ஒரு சமயம் இந்திய ராணுவத்தில் பணியாற்றும் தம்முடைய நண்பன் ஒருவனைச் சந்திக்கச் சென்றபோது, நண்பனுடைய பதவிக்குக் குறைவான பதவி வகிக்கும் ஓர் ஆங்கிலேயன் ஏகாதிபத்தியத் திமிரினால், அந்த நண்பனை இழிவாகப் பேசுவதைக் கேட்க நேர்ந்த தால், தம்முடைய ஆசையை மறக்க முயன் றார். பிறகு அவர் அலிகார் பல்கலைக் கழகத் தில் சேர்ந்தார். அவரை எஞ்சினீயராகக் காண விழைந்த தந்தை, ஓராண்டுக்குள் பல் கலைக் கழகத்திலிருந்து திரும்புமாறு பணித்த துடன், அவரை இங்கிலாந்துக்கு அனுப்பவும் ஏற்பாடு செய்யலானார். மூத்த மகன் கல்வி நிமித்தம் வெளிநாடு சென்றதால் சோக முற்ற அன்னை, தம்முடைய இரண்டாவது குமாரனையும் பிரிந்து வாழ விரும்பவில்லை. அன்னையின் சொற்களைக் கேட்டு பாத்ஷா கான் மனம் நெகிழ்ந்தார். தந்தையுடன் வாதாடி வெளிநாட்டுப் பயணத்தை நிறுத்தி விட்டார்.

"தம்முடைய மக்களுக்குக் கல்வி தேவை. நீ எளிமையான வாழ்க்கையை ஏற்றுக் கொண்டு, மக்களிடையே கல்விப் பணி யாற்று" என்று அன்னை கூறிய வாக்கை ஏற்றுக் கொண்டு அதில் கவனம் செலுத்த லானார். தம்முடைய மாவட்டத்தில் சில பள்ளிக்கூடங்களைத் தொடங்கி, சிறுவர் களுக்கு — தேசிய முறையில் — கல்வி புகட்ட



வோம்'' என்று கூறியதையும் தந்தை பொருட்படுத்தவில்லை. இதன் விளைவாகத் தந்தையும் கைதானார். தந்தையும் மகனும் சிறை சென்றார்கள். அன்பு வழியை ஏற்றுக் கொண்ட அவ்விருவரும் சிறைக் கொடுமையைச் சகித்துக் கொண்டார்கள். மூன்று மாதச் சிறைவாசத்துக்குப் பிறகு தந்தை விடுதலை பெற்றார்; தனயனோ ஆறுமாதங்கள் சிறை வாசம் அநுபவித்த பிறகு வெளியே வந்தார்.

பாத்ஷாகான 1920ஆம் ஆண்டில் நாகபுரியில் நடந்த காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்துக்கு வந்தார். கிலாபத் இயக்கத்தில் தீவிரப் பங்கேற்று உழைத்தார். முதிர்ந்த பிராயமடைந்த தந்தையை வசப்படுத்தினால் அவர் மூலம் தனயனையும் வசப்படுத்த

பாத்ஷாகான்.

★

எல்லைப்புற காந்தியும் அண்ணல் காந்தியும்

★

நேருஜியுடன் கஃபார்கான்.

★

அண்மையில் இந்தியா வந்து சேர்ந்த பாத்ஷா கானைப் புது தில்லி விமான நிலையத்தில் பிரதம மந்திரி இந்திராகாந்தியும் ஜெயப் பிரகாஷ் நாராயணனும் வரவேற்கின்றனர்.

★

சென்ற அக்டோபர் இரண்டாந்தேதி ராஜ்காட்டில் காந்திஜியின் சமாதி முன்னால் நடந்த பிரார்த்தனையில் பங்கு பற்றினார் பாத்ஷாகான்.



1911ஆம் ஆண்டில் ஆரம்பித்தார். ஆங்கிலேயர்கள் அதை விரும்பவில்லை. மக்களிடையே மித்ரபேதம் செய்து, பல இடையூறுகளைச் செய்தார்கள். பாத்ஷாகான், மனம் தளராமல் தம் பணியில் கவனம் செலுத்தினார்.

## அரசியல் பிரவேசம்

ரௌலட் சட்டத்தை எதிர்த்து நாட்டில் கிளர்ச்சி ஏற்பட்டபோது, பாத்ஷாகானும் அதில் சேர்ந்து கொண்டார். பட்டாணியக் குலத்தைச் சேர்ந்த ஒருவர், ஆங்கில அரசை எதிர்க்கத் துணிவதை ஏகாதிபத்தியம் எப்படி ஏற்கும்? அவரைக் கைது செய்ததுடன், அவருடைய தந்தையையும் மிரட்டத் துணிந்தது. ஆனால் பெராம்கான், ''மக்கள் சேவையை ஏற்றுக் கொண்ட நான், மக்களுக்கு விரோதமான சட்டத்தை எப்படி ஏற்க முடியும்?'' என்று கேட்டார். சமுதாயத் தலைவர்கள் திடுக்கிட்டார்கள். ஆங்கில அரசு, ''அவரைச் கட்டுக் கொன்று விடு

முடியும் என்று கருதிய ஆங்கில கமிஷனர், ஸர் ஜான் மாஃபே, தந்தையிடம் வந்தார். தேசியக் கல்விப் பணியில் ஈடுபட வேண்டாம் என்று தனயனை வற்புறுத்துமாறு கேட்டார். தந்தையும் இசைந்தார், தனயனைச் சந்தித்தார்.

''தேசியக் கல்வியூட்டுவதைச் சமயக் கடமைகளில் ஒன்றாக நான் கருதுகிறேன். தொழுகை நடத்தத் தவறினால் கல்விப் பணியையும் விட்டுவிடலாம்'' என்று தனயன் கூறியதும், ''நல்லது, உன் விருப்பப்படியே கடமையைச் செய்'' என்று தந்தை பணித்தார்.

ஆங்கில அரசு திகைத்தது. பாத்ஷாகான் மீது ராஜத் துவேஷக் குற்றம் சாட்டி மூன்றாண்டு கடின காவல் தண்டனை விதித்துத் தனிக் கொட்டடிக்கு அனுப்பிற்று. அவருடைய அன்பான இயல்பும், சமயப் பற்றும் நேர்மையும் கண்டு சிறைச் சிப்பந்திகள் மரியாதையுடன் பழகினார்கள். அவரிடம் ஈடுபாடு கொண்ட ஒரு சிறைக் காவலன், சிறையில் லஞ்சமும் நேர்மையற்ற செயல்

களும் மலிந்திருப்பதைக் கண்டு, மனம் வெதும்பி, தன்னுடைய வேலையை இராஜி நாமாச் செய்தான். பாத்ஷாகானுடைய செல்வாக்கு வளருவதைக் கண்ட சிறை அதிகாரி திடுக்கிட்டார். அவரை வேறு சிறைக்கு மாற்ற வேண்டும் என்று மேலதி காரிகளுக்குச் செய்தி அனுப்பினர். அதை ஏற்றுக் கொண்டு, அவரைப் பஞ்சாபிலுள்ள குஜராத் சிறைக்கு மாற்றினார்கள்.

குஜராத் சிறையில் பிற அரசியல் கைதி களுடன் பழகும் வாய்ப்பு பாத்ஷாகானுக்குக் கிடைத்தது. அப்போது அவர் பகவத்கீதை யையும் சீக்கியர்களுடைய வேத நூலான கிரந்த சாகேபையும் கற்றார்.

''ஒரு மதத்தில் சேர்ந்தவர்களுடைய எண் ணிக்கையைக் கொண்டு அதன் வலிமையைக் கணக்கிட நான் விரும்பவில்லை. சமய நம் பிக்கையுடன் வாழ்கிறவர்களுடைய எண் ணிக்கையைக் கொண்டே ஒரு சமயத்தின் சிறப்பை உணர வேண்டும். உண்மையான உழைப்பு, நம்பிக்கை, அன்பு ஆகியவற் றையே இஸ்லாம் போதிக்கிறது. ஒரே கடவு ளிடம் நம்பிக்கையும் நற்பணியுமே மனித னுக்கு மோட்சம் அளிக்கிறது என்று 'கொரான் ஷெரீஃப்' கூறுகிறது'' என்று பாத்ஷாகான் கூறியிருக்கிறார்.

பாத்ஷாகான் தேசப் பணிக்காக இளைஞர் களைத் திரட்டினர். இளைஞர் படைக்குக் குதாய் கித்மகார் — கடவுளின் ஊழியர்கள்— எனப் பெயரிட்டு, அவர்களை அஹிம்ஸை வழியில் செயலாற்றப் பணித்தார். 'அஹிம் ஸைத் தத்துவம் இஸ்லாமியர்களுக்குப் புதிது அல்ல. நபிநாயகம் அஹிம்ஸையைப் போதித் தார். அதையே இப்போது காந்திஜி வற் புறுத்துகிறார்' என்று கூறி, இளைஞர்களுக்கு ஊக்கமூட்டினார். அவருடைய இளைஞர் படை ஊழியர்கள் உப்பு சத்தியாக்கிரக காலத் தில் சிறப்பாகச் சேவை செய்தார்கள். அதைக் கண்டு மிரண்ட ஆங்கில அரசு அவருக்குத் தண்டனை அளித்ததுடன், விடுதலை பெற்ற பிறகும் ஐந்தாண்டு காலத்துக்குச் சொந்த ஊருக்குத் திரும்பக் கூடாது என்று பணித் தது. ஆகவே விடுதலை பெற்றதும் அவர் வர்தாவுக்குச் சென்று காந்திஜியுடன் தங்கி னார். அப்போது அவர், துளசி ராமாயணம், கீதை முதலியவற்றைப் படித்தார்.

## அஹிம்ஸாவாதி

பாத்ஷா கான் வீர வம்சத்தில் தோன்றிய வர் என்றாலும் அஹிம்ஸை விரதம் ஏற்றுக் கொண்ட பிறகு அதைத் துல்லியமாக அனுஷ்டிப்பதில் கவனம் செலுத்தினார். ஆயுத பலத்தை நம்பி வாழ்ந்த பட்டாணிய இளைஞர்களுக்கு அஹிம்ஸைநெறி போதித்துப் பயிற்சியும் அளித்தார். 1938ஆம் ஆண்டில் அவருடைய அழைப்புக்கு இணங்க காந்திஜி எல்லைப்புற மாகாணத்துக்குச் சென்று சுற் றுப் பயணம் செய்தார்.

பாத்ஷா கானுடைய கிராமத்தில் தங்கி யிருக்கும்போது அவருடைய பாதுகாப்புக் காக வீட்டிலும் புறத்திலும் குதாய் கித்ம கார் தொண்டர் படையைச் சேர்ந்த சில இளைஞர்களை பாத்ஷா கான் நிறுத்தி வைக்க விரும்பினர். ஆனால் காந்திஜி அந்த யோச னையை ஏற்க மறுத்து விட்டார். ஆயுதமில்லா மல் இளைஞர்களைக் காவல் நிறுத்துவதைக் கூட அவர் மறுத்து விட்டார். பாம்பு கடிக்காவிட்டாலும் அது சீறுவதைக் கண்டு மக்கள் அதை அடித்துக் கொல்ல முயலக் கூடும். அது போல ஆயுத மில்லாத காவல் என்றாலும் அது பலாத்காரத்தில் முடிந்து விடக் கூடிய வாய்ப்பு உண்டு என்று காந்திஜி கூறியதை பாத்ஷா கான் ஏற்றுக் கொண்டு விட்டார்.

இரண்டாம் உலகப் போர் தொடங்கியதும் இந்திய மக்களுடைய சம்மதத்தைப் பெறாமல் ஆங்கிலேய அரசு, இந்தியாவைப் போரில் ஈடுபடுத்தியதை காங்கிரஸ் மகாசபை எதிர்த்தது. போர் முடிந்ததும் இந்தியா வுக்கு விடுதலை வழங்குவதாக உத்தரவாதம் அளித்தால் மக்களுடைய உதவியும் ஆதரவும் கிடைக்கும் என்று 1940ம் ஆண்டில் காங் கிரஸ் காரியக்கமிட்டி ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது. ஏகாதிபத்தியம் ஈடு பட்டுள்ள போருக்கு உதவி அளிப்பதே அஹிம்ஸைத் தத்துவத்துக்கு விரோதமானது என்று பாத்ஷாகான் கூறியதுடன் காரியக் கமிட்டி அங்கத்தினர் பதவியிலிருந்தும் ஒதுங்கி விட்டார். அஹிம்ஸையில் முழு நம்பிக்கை யுடன் செயலாற்றும் வீர பட்டாணியத் தலை வருடைய தீர்மானத்துக்கு காந்திஜியும் ஆதரவு அளித்தார்.

''நபிகள் நாயகத்தின் உபதேசத்தை மனப்பூர்வமாக ஏற்றுக் கொண்டு இறை வனிடம் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு, அஹிம்ஸை வழியில் கடமையைச் செய்யும் பாத்ஷா கானுடைய தீர்மானத்தை நான் ஏற்றுக் கொள்கிறேன்'' என்று காந்திஜி 'ஹரிஜன்' பத்திரிகையில் எழுதினர்.

காங்கிரஸ் காரியக்கமிட்டி அங்கத்தினர் பதவியிலிருந்து விலகினாலும், காந்திஜியின் அடிச்சுவட்டில் மக்களுக்குத் தொண்டாற்றி வந்த பாத்ஷா கான், 1942ம் ஆண்டில் மீண்டும் சிறைப்பட்டார். விடுதலை பெறும் சமயத்தில் நாட்டின் பல பகுதிகளில் ஏற் பட்ட வகுப்புக் கலவரங்களைக் கண்டு அவர் துயருற்றார். நாட்டு விடுதலைக்காக ஆயுள் முழுதும் உழைத்த அந்த வீரர், பாகிஸ்தான் பிரிவினைக்குப் பிறகு அங்கு சென்று வசிக்க நேரிட்டதற்கு வருந்தினார். பாகிஸ்தான் அரசு அவரை ஒரு விரோதியாகப் பாவித்து அவருடைய பத்திரிகையை மூடச் செய்த துடன் அவரையும் சிறையில் அடைத்தது. இறைவனிடம் நம்பிக்கை வைத்துக் கட மையைச் செய்யும் அந்த வீரர், கஷ்டங் களைச் சகித்துக் கொண்டார். பல ஆண்டுகள் சிறையில் உழன்றார். விடுதலை பெற்ற பிறகு பாகிஸ்தானில் வசிக்க விருப்பமின்றிக் காபூ லுக்குச் சென்றார்.

ஒரு சமயம் நேருஜி அவருடைய பத்திரி கைப் பணிக்கு நிதி உதவி அளிக்க விரும்பிய போது, ''பொருளுதவி வேண்டாம், அன்பும் ஆதரவும்தான் தேவை'' என்று பெருந்தன் மையுடன் கூறிய கஃபார்கானின் பாரத விஜயம் இன்றைய இந்திய அரசியல் சூழ்நிலை யில் அருமருந்தாகப் பயன்படும். ஆனால் மருந்து கசக்கிறது என்று ஒதுக்கினாலோ.....?

# சிலையைத் தேடி...


7
ரவி சீக்கிரம்! அந்தச் சிப்பாய்கள் இங்கு வரு வதற்குள் இவனை அப்புறப் படுத்த வேண்டும்.
என்னிடம் அந்த 'ஸ்கிப்பிங்' கயிறு இருக்கிறது.
கதை: வாண்டுமாமா
சித்திரம்: ரமணி..


என் கைக்குட்டையால் இவன் வாயைக் கட்டுகிறேன்.


கம்யூனிஸ்ட் சிப்பாய்கள் விடுதலை வீரர்களை லீலாவும் ரவியும் ஒளிந்துள்ள இடிந்த வீட்டின் வழியே இழுத்து வருகிறார்கள்....


பாவம் அந்த மனித னுக்குக் காலில் கட்டு. அவனால் நடக்க முடிய வில்லை. தள்ளாடி விழப் போகிறான்....!


அந்த நாயை அப்படியே விட்டுட்டு வா. அவனைக் கவனித்துக் கொண் டிருக்க நமக்குப் பொழுதில்லை....


எல்லாரும் போய்விட் டார்கள். நாம் அந்த ஊனமுற்றவ— னுக்கு உதவலாம் வா, ரவி...

மெள்ள எழுந்திருங்கள் ஐயா, மயக்கம் எப்படி இருக்கிறது? நீங்கள் நினைவிழந்து விழுவதை நாங்கள் மறைவிடத் திலிருந்து பார்த்தோம்.

அவர்கள்.. அந்தக் கொடியவர்கள் போய் விட்டார்களா?

போய் விட்டார் கள். உங்கள் வீட் டுக்குப் போகலாம். மெள்ள எழுந்திருங் கள்...

அவர் தம் வீட்டுக்குப் போக நீலாவும் ரவியும் உதவுகிறார்கள்.

அதோ. அதுதான் என் வீடு.

கதவு திறந்த போது, பூங்காவில் சந்தித்த அந்தப் பெண்ணும் தாயாரும் தோன்றினார்கள்..

என் அன்பே! உங்களைக் காணோமே என்று தவித் துப் போனேன்.

அப்பா...!

கம்யூனிஸ்டுகள் உங்களைப் பலவந்த மாக இழுத்துப் போன தாகச் சொன்னார்கள். என் மூச்சே நின்று விட்டது!

நீங்களா? உங்கள் பொம்மை திரும்பக் கிடைத்து விட்டது போலிருக்கே!

அதே சமயம் துப்பாக்கி சூடும் சத்தமும் போர் வீரர்களின் பூட்ஸ் கால் ஒலியும் கேட்டன..

இந்தப் போராட்டம் ஓய்ந்து அமைதியான வாழ்க்கை வாழப் போகிறோமா இல்லையா?

சீக்கிரம் வீட்டினுள் போகலாம் வாருங்கள். விடுதலை வீரர்களின் போராட்டம் இன்னும் ஓயவில்லை. இறுதி மூச்சுவரை கம்யூனிஸ்ட் பேய்களை எதிர்த்தே சாவார்கள் அவர்கள்.

# கல்கத்தா கலைஞர்கள்



"என் பெயர் **விசுவநாதன்.** கல்கத்தா கல்லூரி ஒன்றில் ஆங்கிலப் பேராசிரியராகப் பணியாற்றுகிறேன்! அவ்வப்போது வங்காளப் படங்களிலும் நடித்து வருகிறேன். பத்து வருஷங்களுக்கு முன்னாலே நான் சில தமிழ்ப் படங்களிலும் தலையை நீட்டியிருக்கிறேன். சிறந்த வங்காளி நாடகங்களை அடிக்கடி பார்க்க எனக்கும் என்போன்ற நண்பர்களுக்கும் நிறைய வாய்ப்புக்கள் உண்டு. அவை எங்கள் உள்ளங்களிலும் கலை ஆர்வத்தைத் தூண்டின. அதன் விளைவுதான் நாலைந்து வருஷங்களுக்கு முன்னால் எங்களால் தோற்றுவிக்கப்பட்ட 'கல்கத்தா பிளேயர்ஸ்' குழு. சென்னையிலும் எங்கள் ஆர்வத்தைக் காண்பிக்க ஆவல் கொண்டிருந்தோம். அந்த ஆவல் இப்போதுதான் நிறைவேறியது. நானே பேசிக் கொண்டிருந்தால் நண்பர்கள் சண்டைக்கு வருவார்கள்! **சுப்பிரமணியன்!** நீங்கள் சொல்லுங்கோ!"

"ஹௌராவிலே ரயில் ஏறும்போது நம்ப ஸ்வரூப் முகர்ஜி நம்மைத் தவிக்க விட்டாரே! அதைச் சொல்ல வேண்டாமா! இந்த 'பெர்ஃபெக்ட் அலிபை' நாடகத்துக்கு ஒளியமைப்பில் பிரத்தியேகக் கவனம் தேவை. இதற்காகக் கல்கத்தா கலை உலகில் புகழ் வாய்ந்தவரும் எங்கள் நண்பருமான ஸ்வரூப் முகர்ஜி எங்களுடன் சென்னைக்கு வரச் சம்மதித்தார். அவருடைய உதவியாளர்கள் மேடை ஒளி சாதனங்களுடன் முன்னதாகவே ரயிலுக்கு வந்து விட்டனர். ஆனால் முகர்ஜியைக் கடைசி வினாடிவரை காணோம். எங்களுக்கு . ஒரே பதற்றம். வண்டியும் புறப்பட்டு விட்டது.

"கரக்பூர் ஜங்ஷனில் வண்டி நின்றதும் மனிதர் கடைசிப் பெட்டியிலிருந்து இறங்கி வந்தார். வண்டி கிளம்பிய நேரத்தில் பிளாட்பாரத்தில் ஓடிவந்து பிடித்தாராம். ஏனப்பா **விட்டல்!** நீ ஏதாவது சொல்லேன். விட்டல்தான் எங்கள் குழுவின் பொதுஜனத் தொடர்பு அதிகாரி மாதிரி சார்!"

"அமெச்சூர் நாடகக் குழுன்னா அமர்க்களங்கள் இருந்தால்தான் சுவாரசியம்! நாங்க ஒரு சந்தர்ப்பத்திலே பொக்காரோவுக்கு நாடகம் நடிக்கப்போயிருந்தோம். நல்ல வெய்யிற் காலம். அங்கே திறந்த வெளி நாடக மேடை. நாடக அரங்கத்தின் தூண்கள் எல்லாம் இரும்புக் குழாய்கள்தான். மேலேயும் மூடப்படாத இடைவெளியுள்ள இரும்புக் குழாய்கள்தான். அன்று பகலில் நாங்கள் அந்தக் குழாய்களில் காலை வைத்து ஏறி மேலே டார்ப்பாலினும், மற்றும் படுதாக்களும் கட்டுவதற்குள் எங்கள் பாதங்கள் எல்லாம் தாங்க முடியாத சூட்டினால் கொப்பளித்துப் போய் விட்டன. எப்படியோ சமாளித்து எல்லா ஏற்பாடுகளையும் முடித்தோம். நாடகம் ஆரம்பித்த அரை மணி நேரத்துக்கெல்லாம் ஒரு பேய்க் காற்று வீச ஆரம்பித்தது. குடைத் துணி திருப்பிக் கொள்வது போல் எங்கள் படுதாக்கள் எல்லாம் ஒரேயடியாகப் பறக்க ஆரம்பித்தன. நல்ல வேளை! நாடகம் பார்க்க வந்தவர்களில் ஒரு பகுதியினர் அந்த அரங்கத்தைச் சுற்றி நின்று அந்தப் படுதாக்கள் பறந்து போய் விடாமல் இழுத்துப் பிடித்துக்கொண்டு நாடகம் பார்த்தார்கள்."

"என் பெயர் **ராஜாமணி.** நகைச்சுவைப் பாத்திரங்களை என் தலையில் சுமத்துவார்கள். அப்புறம் நான் நகைச்சுவையைச் சரியாக 'எக்ஸ்பிரஸ்' பண்ணவில்லை என்று குற்றமும் சாட்டுவார்கள். இதுவே ஒரு 'காமெடி' என்று நான் நினைத்துக் கொள்வேன். விசுவநாதன் சார் ஏதோ சொல்ல வர்றார். கேளுங்கோ."

"இந்த 'பெர்ஃபெக்ட் அலிபை' நாடகத்தைப் பற்றிக் கொஞ்சம் சொல்லி விடுகிறேன். தலைப்பு இங்கிலீஷ்தான். காரணம்

மேலே : 'பெர்ஃபெக்ட் அலிபி'யில் ஒரு காட்சி.
கீழே : டைரக்டர் விசுவநாதன்.



இந்த 'அலிபை' (alibi) என்கிற வார்த்தைக்குச் சரியான தமிழ்ப் பதம் கிடைக்கவில்லை. இந்த நாடகம் ஒரு வங்கமொழி நாடகத்தின் தழுவல்தான். கல்கத்தாவில் இதை நாங்கள் நான்கு மணி நேரத்துக்கு நடித்துக் காட்டிப் பழக்கம். சென்னையிலுள்ள நண்பர்கள் எங்களை எச்சரித்தார்கள். இங்குள்ள ரசிகர்களுக்கு இரண்டரை மணி அவகாசம்தான் பொறுமை இருக்கும் என்று சொன்னார்கள். ஒன்றரை மணி நேரப் பகுதிக்கு விடை கொடுத்தோம். எங்களுக்குக் கொஞ்சம் வருத்தம்தான். சென்னையிலுள்ள எட்டு சபாக்களின் ஆதரவில் இந்த 'பெர்ஃபெக்ட் அலிபை' நாடகத்தை நடித்தோம். நாடகம் தொடங்கு முன்பே நாங்கள் தேசிய கீதமான 'ஜனகனமன'வைப் பாடி விடுவோம். இது வங்காளப் பழக்கம். நாடகம் முடிந்த பிறகு தேசிய கீதம் பாடினால் அதன் பிறகு நடிகர்களைப் பாராட்டும் வகையில் ரசிகர்கள் கைதட்டுவார்கள். அது தேசிய கீதத்துக்கு மரியாதை செலுத்துவதாகாது!... அது சரி! நானே பேசிக் கொண்டு போகிறேன்! நீங்கள் நாடகத்தைப் பற்றி ஒன்றுமே சொல்லவில்லையே! எப்படி சார் இருந்தது நாடகம்?''

''விசுவநாதன்! நாடகத்தின் முற்பகுதியில் சினிமா டைரக்டர் சோமுவாகவும் பிற்பகுதியில் போலீஸ் இன்ஸ்பெக்டராகவும் நடித்த உங்களால் மாறுபட்ட உணர்ச்சிகளை நன்கு வெளிப்படுத்த முடிந்தது. **நாதன்** நம்முடன் பேசிக் கொண்டிருப்பது போலவே இயற்கையாகப் பேசி ஜமாய்த்தார். அவர் தான் வில்லன் என்று கடைசி நிமிஷம் வரையில் காண்பித்துக் கொள்ளாமல் நடிப்பது சிரமம்தான். ராஜலட்சுமிக்கும் சாரதாவுக்கும் வெவ்வேறு குணமுள்ள பாத்திரங்கள். அதைப் புரிந்துகொண்டு செய்தார்கள். விசுவகுமாராக நடித்த இளைஞர் சங்கர் மேடையில் பட்டோடி நவாப் மாதிரி தோற்றமளித்தார். நடிப்பில் அவர் இன்னும் கொஞ்சம் கவனம் செலுத்த வேண்டும். மற்ற எல்லா நடிகர்களுமே நல்ல ஒத்துழைப்புக் கொடுத்தார்கள்.

''நடிகர்களுக்காகத்தான் கதை என்று நினைக்கும் இந்த நாட்களில் கதைக்காக நடிகர்கள் என்பதை உங்கள் குழு உணர்த்தியது. இதேபோல் ஒரு நாடகத்துக்கு வசனம்தான் உயிர் என்று கருதப்படும் காலத்தில் அசைவும் நடிப்பும்தான் உயிர் என்றும் உங்கள் குழு நிரூபித்தது. ஒரு துப்பறியும் நாடகத்துக்கான தொய்வுகள் ஆங்காங்கே இருந்து கொண்டிருந்தன. சிலந்தி வலை ஒளி வீச்சு, நிழற் காட்சிகள், சினிமா ஷூட்டிங் ஆரம்பம், எங்கிருந்தோ ஒலிக்கும் கீதம் இவை எல்லாம் சிறப்பாக இருந்தன. அவ்வப்போது சன்னமாக, இதமாக உங்கள் 'டேப் ரிகார்டர்' மூலம் ஒலித்த ரவிசங்கரின் சித்தார் இசை ரம்மியமாக இருந்தது. மொத்தத்தில் உங்கள் நாடகம் சென்னை ரசிகர்கள் வழக்கமாகப் பார்க்கும் நாடகங்களிலிருந்து மாறுபட்டு ஒரு புதிய அநுபவமாக இருந்தது.'' — **பட்டினத்தார்**

---



## வாணி — மீரா நடனம்

இவ்விரு இள நடனமணிகளின் ஜதி அடவுகளின் தாளக்கட்டும் அங்க அசைவுகளின் மிதத் தன்மையும் கலை அழகையே வலியுறுத்தும் பாவங்களும், அவர்களுடைய அப்பியாசத்தின் வலிமையையும் இக்கலை நுட்பங்களை அறிந்து கொள்ள வேண்டும் என்பதில் அவர்களுக்குள்ள ஆர்வத்தையும் எடுத்துக் காட்டுகின்றன. அலாரிப்பு சப்தத்திலிருந்து, பதங்கள், ஜாவளிகள் முடியும்வரை நடனங்கள் அழகு குன்றாமல் இருந்தன.

இருவரும் பம்பாய் நகரத்தில் வசிப்பவர்கள். நம்முடைய பரதக் கலையைப் பயிலச் சென்னையில் இருப்பவர்களுக்குள்ள சமமான வாய்ப்பை அளித்து வரும் பம்பாய் ஸ்ரீ ராஜராஜேசுவரி பரத நாட்டிய கலாமந்திரத்தின் சிறப்பு மாணவிகள் இவ்விருவரும். பரத நாட்டிய வித்வான் குரு கல்யாண சுந்தரம் பிள்ளையிடமும் கோவிந்தராஜப் பிள்ளையிடமும் இவர்கள் நடனம் பயின்றவர்கள். இவர்களுடைய நிகழ்ச்சிகளில் பதம் பாடும் பொறுப்பை இவர்களின் தாயார் ஸ்ரீமதி இந்துபாலா கணபதியே ஏற்று மிக்க திறமையுடன் நிறைவேற்றி வருகிறார். ★






★ இருப்பிடம் என்ற ஹோதாவில் பக்கத்தில் இல்லா விட்டாலும் தொழில் முறையில் எப்போதும் டாக்டர் ரத்தினவேல் சுப்பிரமணியத்தின் அருகில் இருக்கும் வாய்ப்புப் பெற்றவர் இருதயநோய் நிபுணர் டாக்டர் வி. லட்சுமிகாந்தன். இவர் டாக்டர் ரத்தினவேல் சுப்பிரமணியத்தின் கனிவு நிறைந்த இதயத்தை யும் நன்கு புரிந்து கொண்டிருப்பவர். மனம் விட்டுத் தமக்குத் தெரிந்தவற்றைக் கூறுகிறார்:

டாக்டர் ரத்தினவேல் சுப்பிரமணியம் மருத்துவத் துறையில் எத்தனை நிபுணரோ அதே போல் பக்தித் துறையிலும் ஒரு நிபுணர்தான். நெற்றியில் எப்போதும் விபூதி இருக்கும் என்ற காரணத்தால் அல்ல. அவர் உள்ளத்தில் எப்போதும் பக்தி உணர்ச்சி பெருக்கெடுத்தோடிக் கொண்டிருக்கும் என்று என் போன்றவர்களுக்குத் தெரியும். மனம் சற்றுச் சரியில்லை என்றால் உடனே காரை எடுத்துக் கொண்டு சிதம்பரத்துக்குக் கிளம்பி விடுவார். தில்லை நடராஜரைத் தரிசனம் செய்துவிட்டு மன நிறைவுடன் திரும்புவார்.

''நான் இதுவரை எந்த மனிதரிடமும் எதற்காகவும் வேண்டிக்கொண்ட நினைவில்லை. நான் கையை நீட்டுவதெல்லாம் அந்த நடராஜப் பெருமானை நோக்கித்தான்'' என்று இவர் சொல்லிக் கேட்டிருக்கிறேன்.

தம் மன நிறைவுக்காக என்று இவர் இந்த நடராஜ தரிசனத்தை 'ரிசர்வ்' செய்து கொள்வதில்லை. பிறர் மன நிறைவுக்காக வும் இந்த யாத்திரையை இவர் மேற் கொள்வதுண்டு. இவருடைய உதவியா ளர்களில் ஒருவர் பல நாட்கள் உத்தி யோகத்தில் பதவி உயர்வு கிடைக்காமல் மனம் நொந்து போயிருந்தார். திறமை வாய்ந்தவர். யுத்த சேவை செய்தவர். எல்லா யோக்கியதைகளையும் பெற்றி ருந்தவர். கடைசியில் டாக்டர் ரத்தின வேல் சுப்பிரமணியம், அந்த உதவியாளர் விண்ணப்பத்தை நன்கு பரிசீலித்து, பதவி உயர்வுக்குத் தகுதியானவர்தான் என்று குறிப்பு எழுதிச் சம்பந்தப்பட்ட மேலிடத்துக்கு அனுப்பி வைத்தார். ஆனால் சீக்கிரமே அந்த உதவியாளருக்கு வெற்றி வாய்ப்பு மிகவும் குறைவு என் றும், அவருக்குப் பதிலாக வேறு ஒருவ ருக்குத்தான் அந்த வாய்ப்புக் கிட்டும் என்றும் தகவல் கிடைத்தது. டாக்டர் மனம் வேதனையடைந்தது. நேராகச் சிதம்பரத்துக்குக் கிளம்பி விட்டார்

மறுநாள் திரும்பி வந்தவருக்கு மகிழ்ச்சி தரும் செய்தி காத்திருந்தது. இவருடைய உதவியாளரின் விண்ணப்பத்துக்குச் சாதகமான பதில் வந்திருந்தது!

டாக்டர் ஆர். எஸ். (ஆம்! ரத்தினவேலு சுப்பிரமணியம் அவர்களை நாங்கள் அன்புட னும் அபிமானத்துடனும் அப்படித்தான் சுருக்கமாகக் குறிப்பிடுவோம்) கார்த்திகை விரதத்தைப் பூரண உபவாசத்துடன் அனுஷ் டிப்பவர். இதையும் இவர் இவருடைய மருத்துவக் கல்லூரி குருநாதரிடமிருந்து கற்றுக் கொண்டாராம்.

டாக்டர் ஆர். எஸ். அதிகாலையில் விழித் துக்கொள்ளும் பழக்கம் உள்ளவர். நாலு அல்லது நாலரைக்குள் விழித்துக் கொண்டு விடுவார். ஐந்தே முக்கால் வரை படித்துக் கொண்டிருப்பார். அப்புறம் சுமார் நாற்பது நிமிட நேரம் ஆசனப் பயிற்சியும் செய்வார்.

புகைப் படங்கள் பிடிப்பது இவருக்கு ஒரு காலத்தில் சிறந்த பொழுதுபோக்காக இருந்தது. இப்போது அதற்கு அவ்வளவு அவகாசம் கிடைப்பதில்லை. கோடைக்காலத் தில் எப்படியும் ஒரு மாத ஓய்வுக்காகக் கோடைக்கானலில் போய்த் தங்கி வருவதை ஒரு பழக்கமாக வைத்துக் கொண்டிருக் கிறார். அப்போது தம் காமிராவையும் கையுடன் எடுத்துச் செல்வார்.

தொழில் நேரமல்லாத வேளைகளில் இவ ருக்கு ஹாய்யாக ஒரு ஜிப்பாவை மாட்டிக் கொண்டு புறப்படுவதில் அலாதி குஷி. ஜிப்பா, வேட்டிதான் இவருடைய 'சோஷல்' உடை. எந்தப் பொது நிகழ்ச்சிகளிலும் இவரை ஜிப்பாவில்தான் பார்க்கலாம். கலை



களிலும் இவருக்குச் சிறந்த ஈடுபாடு உண்டு. குறிப்பாகப் பரத நாட்டியத்தின் பேரில் தனிப் பிரியம். இவர் குமாரத்திக்குப் பரத நாட்டியத்தில் சிறந்த பயிற்சி அளித்திருக்கிறார். காலம் சென்ற இவர் மனைவியின் பெயரில் ஒரு பரதநாட்டியப் பள்ளியையே நடத்த ஏற்பாடு செய்திருக்கிறார். அங்கே சாஸ்திரீயமான பரத நாட்டியம் மாத்திரமே கற்பிக்கப்படுகிறது. இது தவிர இவர் பெயரில் ஓர் ஆண்கள் உயர்நிலைப் பள்ளியும், பெண்கள் உயர்நிலைப் பள்ளியும் நடந்து வருகின்றன. கல்வித் துறையில் இவருக்கு நிறைய அக்கறை உண்டு.

சாப்பாட்டு முறையில் சுத்த சைவம். பழங்கள் நிறையச் சேர்த்துக் கொள்வார். மற்ற வகையில் இது பிடிக்கும், அது பிடிக்காது என்ற விருப்பு வெறுப்புக்கள் இல்லை.

எப்போதும் கலகலப்பாகவும் இனிய சுபாவத்துடனும் பழகும் தன்மை வாய்ந்தவர். இவர் முகத்தில் கடுகடுப்பு தோன்றுவதென்பது அபூர்வ நிகழ்ச்சி. ஆஸ்பத்திரியில் சேர்க்கப் பட்டிருக்கும் வியாதியஸ்தர்களை விசேஷமாகக் கவனிக்கச் சொல்லி வீட்டில் வந்து தம் பண பலத்தின் நம்பிக்கையில் வற்புறுத்துபவர்களைப் பார்க்கும் போதுதான் இவருக்குக் கோபம் வரும். ''வியாதியஸ்தர்களைக் கவனித்துக் குணப்படுத்தி அனுப்ப வேண்டும் என்பதுதான் எங்கள் லட்சியம், கடமை! நீங்கள் சொல்லிக் கொடுக்க வேண்டாம்'' என்று சீறி எழுந்து விடுவார்.

காலம் சென்ற முதல் அமைச்சர் அண்ணாதுரையின் நெடு நாளைய நண்பர்; டாக்டரும் கூட. அண்ணா முதலமைச்சராகி யிருந்த ஆரம்பக் கட்டம். ஒரு நாள் அண்ணாவின் உடல் நிலை கொஞ்சம் சரியில்லை என்று கேள்விப்பட்டு டாக்டர் ஆர். எஸ். அண்ணாவின் இல்லத்துக்குப் போய்ச்சேர்ந்தார். ''அடடா! நீங்க எதற்காக இங்கே வந்தீங்க? அவசியம்னு தோன்றினால் நானே நேரில் உங்க வீட்டுக்குப் புறப்பட்டு வந்துட மாட்டேனா? உங்க வீட்டுக்கு வந்து உங்கள் பரிசோதனைக் கட்டிலில் படுத்து நீங்கள் டெஸ்ட் பண்ணினால்தான் எனக்குத் திருப்தியாக இருக்கும்'' என்று சொல்லிவிட்டு, அண்ணா அவர்கள் சிரித்துக் கொண்டே ''இந்தமாதிரி பதவி யெல்லாம் இப்போது வந்ததுதானே? நாளைக்கே போய் விட்டது என்றால் அப்புறம் நான் உங்களை இப்படி வரவழைக்க முடியுமா? அதற்காகத்தான் சொன்னேன்!'' என்றாராம். அண்ணாவுக்குப் புற்றுநோய் வருவதற்கு ரொம்ப நாள் முன்னால் நடந்த சம்பவம் இது.

டாக்டர் ஆர். எஸ்.ஸிடம் அண்ணா அவர்களுக்கு அத்தனை மதிப்பு. அத்தனை நட்பு. திருத்தணிக் கோவிலுக்குப் பாதைத் திறப்பு விழாவுக்கு அண்ணாவைக் கோவில் நிர்வாகம் வற்புறுத்தி அழைத்தபோது அவர் பல காரணங்கள் சொல்லி மறுத்துவிட்டார். கோவில் நிர்வாகத்தினருக்கு எப்படியாவது அண்ணாவை அழைத்துக் கொண்டு போக வேண்டுமென்று ஒரே ஆவல். அவர்கள் டாக்டர் ஆர். எஸ்.ஸை அணுகினார்கள். ''நீங்கள் சொன்னால்தான் அவர் வருவார்'' என்று வேண்டினார்கள். டாக்டர் ஆர். எஸ். அண்ணாவிடம் போனார். தாமும் அவர் கூட வரத் தயார் என்றும், அண்ணா அவசியம் திருத்தணிக்குப் புறப்பட வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார். அண்ணாவால் அதற்கு மேல் தட்டிச் சொல்ல முடியவில்லை. சம்மதித்து விட்டார். இருவருமாகப் போய் விட்டு வந்தார்கள்.

இவருடைய சகோதரர் சட்டப் படிப்புப் படித்து உயர் நீதி மன்றத்தில் நீதிபதியாக இருப்பவர். அவருடைய குமாரத்தி மருத்துவக் கல்லூரியில் பயின்று டாக்டர் பட்டம் பெற்றார். மருத்துவ நிபுணரான இவருடைய குமாரத்தியோ, சட்டம் படித்து வழக்கறிஞர் பட்டம் பெற்றிருக்கிறார். இது ஒரு விசித்திரமான குடும்ப நிகழ்ச்சி.

டாக்டர் ஆர். எஸ். வெப்பப் பிரதேச வியாதிகள் பற்றிய ஆராய்ச்சியில் நிபுணர். இந்த வியாதிகள் பற்றிய இவருடைய ஆராய்ச்சிக் கட்டுரைகள் பல வெளிநாட்டு மருத்துவ சஞ்சிகைகளில் வெளியாகின்றன. சமீப காலமாக அவர் இருதய சம்பந்தமான நோய்கள் விஷயத்திலும் அக்கறை காட்டி வருகிறார். இருதய நோய்கள் ஆராய்ச்சிக்காக ஒரு தனி மருத்துவக் கூடமே வேண்டும் என்ற எண்ணத்துக்குத் தமிழக மருத்துவத் துறையில் வித்திட்டவரே இவர்தான். இதன் விளைவாகத்தான் இப்போது ஒரு பிரத்தியேக ஏழு மாடிக் கட்டிடம் உருவாகிக் கொண்டிருக்கிறது. தாம் யோசனை சொன்னதோடு டாக்டர் ஆர். எஸ். நின்றுவிடவில்லை. தம் குமாரத்தியின் ஒத்துழைப்பையும் ஏற்றுப் பல கலை நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்து சுமார் ஒன்றரை லட்ச ரூபாய் வசூல் செய்து சர்க்காரிடம் ஒப்படைத்தார். அதற்கு மேல் அரசாங்கம் செலவுகளை மேற்கொண்டது.

நிர்வாகத்தில் ரொம்பக் கண்டிப்பானவர். ஆனால் அந்தக் கண்டிப்புக்கு எப்போதுமே அவரிடம் ஒரு இனிய போர்வை உண்டு. சுமுகமாகவே எல்லா வேலைகளையும் முடிக்க வைக்கும் சரளமான குழந்தை சுபாவம்.

நான் மருத்துவக் கல்லூரியில் இவருடைய மாணவன் தான். எம். பி. பி. எஸ். பரீட்சையில் நான்கு தங்கப் பதக்கங்கள் வாங்கிச் சிறப்பாக வெற்றி பெற்றேன். எனக்கு மேற்படிப்பை வெளி நாடுகளில் தொடர வேண்டும் என்கிற ஆவல். டாக்டர் ஆர். எஸ். அவர்களை அணுகி யோசனை கேட்டேன். அவர் என்ன சொன்னார் தெரியுமா?

'' முதலிலே நம்ப நாட்டிலே உள்ள படிப்பை யெல்லாம் முடிச்சுக்க. வெளி நாடுகளுக்குப் போக ஆசைப்பட்டால் நீ ஒரு நிபுணன் என்ற முறையில்தான் போக வேண்டும். அப்போதுதான் பல புதிய விஷயங்களை நன்றாகத் தெரிந்துகொள்ள முடியும்'' என்றார். நான் அவர் யோசனையைத்தான் கடைப்பிடித்தேன்.

ஒரு திறமையுள்ள குரு, அன்பு நிறைந்த ஒரு சக டாக்டர், பண்பு நிறைந்த ஒரு நண்பர் என்ற மூன்று கோணங்களிலிருந்து நான் தினம் அவரைப் பார்த்து வியப்படைகிறேன். பேட்டி: **கோமதி சுவாமிநாதன்**

## அத்தியாயம் 8

# அந்தரங்கக் காரியதரிசி



# சாருலதா

கி.ராஜேந்திரன்

**சா**ருலதா பில்டிங்ஸின் எட்டாவது மாடிக்கு அதன் உரிமையாளரை விரைவாக லிப்ட் கொண்டு சென்றது. ஏழாவது எட்டாவது மாடிகளில் தொழில் வர்க்கத் துறைகளில் ஈடுபட்டிருந்த அவளுடைய பல காரியாலயங்கள் இருந்தன. மீதமுள்ள ஆறு மாடிகளையும் வேறு பல கம்பெனிகள் வாடகைக்கு எடுத்துக் கொண்டிருந்தன. தரை மட்டத்தில் கடைகள் அமைந்திருந்தன.

லிப்ட்டில் மேலும் கீழுமாகப் போய் வருவதென்பது சாருலதாவுக்கு மிகவும் பிடித்தமான விஷயம். என்றாவது ஒரு நாள் தான் ஒருத்தி மட்டுமே லிப்ட்டில் இருந்து கொண்டு அதை இயக்கி மேலும் கீழும் போய் வந்துகொண்டே இருக்க வேண்டும் என்று அவள் நினைத்ததுண்டு. ஆனால் அந்த ஆசை ஈடேறியது கிடையாது. 'பெரிய மனிதர்களாயிருப்பதில் இதுதான் சங்கடம்' என்று நினைத்தாள் சாருலதா. 'அவர்களுடைய அற்ப ஆசைகள் பல நிறைவேறாமலே போய்விடும்! இந்தப் பெரிய கட்டடமும், இந்த லிப்ட்டும் எல்லாமே எனக்குச் சொந்தம்தான். ஆனால் அதற்காக நான் என் இஷ்டப்படி எட்டுத் தடவை மேலேயும் கீழேயும் ஒரு காரியமும் இல்லாமல் போய் வந்தால் என்ன நினைப்பார்கள்?' இப்படி எண்ணுகையிலேயே சாருலதாவுக்குச் சிரிப்பு வந்தது. அதைப் புன்னகையிலே தேக்கி, கைக்கடிகாரத்தைப் பார்த்தாள்.

காரியாலய நேரத்துக்குப் பத்து நிமிஷங்கள் முன்னால் வருவதும் மாலையில் குறித்த நேரத்துக்கு ஐந்து நிமிஷங்கள் முன்னதாகக் கிளம்புவதும் சாருலதாவின் அன்றாட வழக்கம்.

மிக விசாலமான அவளது காரியாலய அறையில் ஒரு பக்கத்தில் நவீன பாணியில் அமைந்த பெரிய அரை வட்ட வடிவ மேஜை. அதற்குப் பின்னால் உருளும் சக்கரங்களுடனும் சாய்ந்து, நிமிர உதவும் ஸ்பிரிங்குடனும் கூடிய நாற்காலி. மென்மையான அவள் உடலைத் தாங்கவே தயாரிக்கப்பட்டதுபோல் அது மெத்து மெத்தென்று ரப்பர் குஷனாலும் அதை மூடிய உயர் ரகத் தோலினாலும் உருவாகியிருந்தது. நாற்காலிக்குப் பின்னால் ஒரு மாடர்ன் ஆர்ட் படம் தடித்த ஃபிரேமுக்குள் அடங்கிச் சுவரில் மாட்டப்பட்டிருந்தது. சாருலதா அமர்ந்தால் அவள் தலைக்கு மேலாக இருப்பது போலவும் நின்றால் அதில் பாதி மறைவது போலும் கணக்கிட்டுக் குறிப்பிட்ட ஓர் உயரத்தில் தொங்கியது. ஒன்றும் புரியாத அந்த விகார ஓவியத்துக்கு அருகே ஆதிநாள் முதல் இன்றுவரை அனைவருக்கும் எளிதில் புரிகிற எழில் தோற்றமாகச் சாருலதா என்ற பெண்ணுருவைப் பார்க்கும் போது ஏற்படக் கூடிய உணர்ச்சிகளைப் புரிந்து கொண்டு அதற்காகவே திட்டமிட்டு அந்த மாடர்ன் ஆர்ட் அங்கு மாட்டப்பட்டிருந்தது. அறையின் ஒரு பக்கத்தில் அன்றலர்ந்த மலர்கள் அலங்காரமாக வைக்கப்பட்டிருந்தன. கண்ணாடிக் கதவுகளைக் கொண்ட பெரிய ஜன்னல். வெனிஷியன் பிளைண்ட் திரை. நன்கு பாலிஷ் ஏறி மினுமினுத்த புத்தக அலமாரியில் புது மெருகு குன்றாமல் சில புத்தகங்கள் — வோர்ல்ட் புக் என்ஸைக்ளோபீடியா, லைஃப் நேச்சர் லைப்ரரி, ரீடர்ஜ்ஸ் டைஜஸ்ட் அல்மானக் — போன்றவை. ஒருபுறம் நடராஜரின் பெரிய வெண்கலச் சிலை. இன்னொரு பக்கத்தில் ஜப்பானிய மங்கை ஒருத்தியின் பொம்மை உருவம், ஷோ கேஸில் வைக்கப்பட்டிருந்தது.

அயல்நாட்டிலிருந்து சாருலதாவைக் காண வரும் விருந்தினருக்கு ஏற்ப ஷோ கேஸில் பொம்மை மாறும். சுவரோடு சுவராக அமைந்திருந்த மரக் கதவுடன்கூடிய அலமாரியில் பிரிட்டிஷ்

அரண்மனைக் காவலாளிப் பொம்மை, ஜெர்மனியின் பவேரியப் பகுதி பெண் மணியின் பொம்மை, அமெரிக்க சுதந் திர தேவியின் சிலை மாதிரி, பாரீஸ் ஐஃபெல் டவரின் தோற்றம் என்று பல ரகப் பொம்மைகள் தேவைக் கேற்பப் பயன்படத் தயாராகக் காத் திருந்தன. அறையின் மற்றொரு பக்கத் தில் முக்கியஸ்தர்கள் வந்தால் அமர்ந்து உரையாட வசதியாகச் சோபாக்கள் போடப்பட்டிருந்தன.

சாருலதா, ஒரு மிடுக்குடனும் ஆனால் அதே சமயத்தில் ஒய்யாரம் குறையாமலும் நடந்து வந்து தனது நாற்காலியில் அமர்ந்தாள். விக்டோரியா மகாராணிகூடச் சிம்மாச னத்தில் இத்தனை கம்பீரமாக அமர்ந் திருப்பாளா என்று சந்தேகிக்க வைக்



கும் அளவுக்கு இருந்தது அந்தக் காட்சி. அந்தக் கட்டடம் முழுதுமே ஏர்கண்டிஷன் செய்யப்பட்டிருந்ததால் சாருலதா வெய்யில் காலத்தில்கூடப் பட்டுப் புடவை அணிந்து வருவது சாத்தியமாயிருந்தது. இன்று அவள், சிறிய சரிகைப் புள்ளிகளுடன் கூடிய கருநீலநிறப் புடவை உடுத்தி வெண்மையான நீண்ட கழுத்தைச் சுற்றி நீலக் கற்கள் பதித்த ஒரே ஒரு நெக்லஸ் அணிந்து ஜொலித்தாள். தனது அறைச் சுவரில் பூசப்பட்டுள்ள சந்தன நிறத்தில் புடவையோ அல்லது சோபாசெட்டின் பழுப்புநிறத்தில் புடவையோ அணிந்து காரியாலயத்துக்கு வரக் கூடாது என்பதில் மிகுந்த கவனமாக இருந்து வந்தாள் அவள்.

சாருலதா பின்னேடு, காரிலிருந்து பெட்டியைச் சுமந்து கொண்டு வந்த பியூன் வேதாசலம், அதை மேஜையின் மேல் வைத்து விட்டு நின்ருன்.

''நீ போய்க் குமாரை வரச் சொல்லு'' என்ருள் சாருலதா.

சில விநாடிகளில் அன்றையத் தபால்களை ஒரு கையிலும், மறு கையில் ஷார்ட் ஹாண்ட் நோட்டுப் புத்தகம், பென்சிலுடனும் வந்தான் குமார். அவள் மேஜைமீது குமார் வைத்த தபால்களின் உறைகளைப் பிரித்துக் கடிதங்களை ஒன்றன் மீதொன்ருய் அடுக்க ஆரம்பித்தான் வேதாசலம்.

''காசிராம் அண்டு சிவராம் கம்பெனிக்கு எழுத வேண்டிய கடிதத்துக்கு நோட்ஸ் தயாரித்து வைத்



ஒரே ஜலதோஷம்...
சாப்பாடே பிடிக்கலே..
கஷ்டமா இருக்கு!

# விக்ஸ் வேபோரப் ஜலதோஷத்தின் தொல்லைகளை உடனே நிறுத்துகிறது.

விக்ஸ் வேபோரப்பின் சிறப்பு. அதை ஜலதோஷம் பிடிக்கும் இடங்களான மூக்கு, தொண்டை, மார்பு, முதுகு. இங்கெல்லாம் நேரடியாகத் தடவலாம். நீங்கள் ஜலதோஷத்தின் தொல்லைகளிலிருந்து உடனே நிவாரணம் பெறுகிறீர்கள். தாராளமாக மூச்சுவிடுகிறீர்கள். சுகமடைகிறீர்கள்.

விக்ஸ்வேபோரப் குணமளிப்பதன் காரணம் அது ஜலதோஷத்தை எதிர்த்து உள்ளும் புறமும் இரு வழிகளில் போராடுகிறது.

1) 

உடம்பின் மேலே

2) 

உடம்பின் உள்ளே

1) விக்ஸ் வேபோரப் ஜலதோஷத்தால் ஏற்படும் உடல்வலியைப் போக்குகிறது. 2) வேபோரப் ஆவியாக மாற்றப்படுகிறது. இந்த ஆவியில் மருந்து இருக்கிறது. ஒவ்வொரு முறை சுவாசிக்கும்போதும் இது உள்ளே ஆழச் சென்று, மூக்கு அடைப்பைப் போக்குகிறது. தொண்டை கரகரப்பை நிறுத்துகிறது. மார்பு கபத்தை நீக்குகிறது. ஜலதோஷத்தின் தொல்லைகள் மறைகின்றன.

**முக்கியமான குறிப்புகள்**



விரைவாக குணம்பெற, மூக்கு, தொண்டை, மார்பு, முதுகு இங்கெல்லாம் விக்ஸ் வேபோரப்பை நன்கு தேயுங்கள்.

ஜலதோஷம் நீங்கும்வரை இதைத் தொடர்ந்து செய்து வரவும்.




## ஜலதோஷத்திற்கு மருந்து விக்ஸ் வேபோரப்

திருக்கிறேன். நீங்களே லெட்டர் டிராப்ட் செய்து காட்டுங்கள்.

'' ஆடிட்டர் சுப்புரத்தினத்துக்கு ஃபோன் போட்டு வில்லி பிரான்ட் கம்பெனியுடன் செய்து கொள்ள வேண்டிய ஒப்பந்தம் பற்றிப் பேச விரும்புகிறேன் என்று சொல்லுங்கள். எப்போ அவருக்குச் சௌகரியப்படும் என்று கேட்டுக் கொள்ளுங்கள்....

'' வேறு ஏதாவது விசேஷம் உண்டா ?''

''சாரங்கன் என்று ஒருவர் உங்களைப் பார்க்கக் காத்திருக்கிறார். ஒன்பதே முக்காலுக்கு வரச் சொன்னீர்களாம்.''

''சரி, அவரை உள்ளே அனுப்புங்கள்'' என்று கூறியபடியே சாருலதா தன்னுடன் வீட்டிலிருந்து வந்த பெட்டியைத் திறந்து காசிராம் அண்டு சிவராம் ஃபைலை எடுத்துக் குமாரிடம் கொடுத்தாள்.

மேஜையின் மேல் அடுக்கி வைக்கப் பட்டிருந்த கடிதங்களை ஒவ்வொன்றாய் எடுத்துப் படித்து இடதுபுறம் 'மார்ஜி'னில் 'நோட்ஸ்' எழுத ஆரம்பித்தாள். அல்லது தனித் தாளில் 'மெமோ' எழுதிக் கடிதத்துடன் குண்டூசியால் இணைத்தாள்.

''குட்மார்னிங்'' என்ற கலகலப்பான குரல் கேட்கவே நிமிர்ந்த சாருலதா, ''உட்காருங்கள்'' என்று மேஜையின் எதிரே இருந்த நாற்காலிகளைச் சுட்டிக் காட்டிவிட்டுத் தன் காரியத்தில் லயித்திருந்தாள். பியூன் வேதாசலம் கடைசிக் கடிதத்தையும் பிரித்து வைத்துவிட்டு அறைக்கு வெளியே சென்ற பின்னர்தான், பேனாவை வைத்துவிட்டு நிமிர்ந்து சாரங்கனைப் பார்த்தாள். ''கிளாட் டு ஸீ யு எகெய்ன்'' என்றாள் புன்முறுவலுடன்.

சாரங்கன் தன் பாக்கெட்டிலிருந்து ஒரு சிறிய நோட்டுப் புத்தகத்தை எடுத்துப் பிரித்தான். அதில் கண்ணோட்டம் செலுத்தியபடியே பேசினான் : ''நெம்பர் ஒன் : ரோஸ்மேரி எஸ்டேட்ஸ் என்ற பெயரைச் சாருலதா எஸ்டேட்ஸ் என்று மாற்றி அது சம்பந்தப்பட்ட எல்லா விவரங்களையும் கவனித்து ஏற்பாடு செய்தாகி விட்டது. நெம்பர் டூ : கோயிலும் சர்ச்சும் கட்ட எஸ்டிமேட்டும் புளூ பிரிண்டும் தயாராகி விட்டன. பின்னோடு கொண்டு வந்திருக்கிறேன். நீங்கள் பார்க்க விரும்பினால் பிளான்களைக் காட்டுகிறேன். நெம்பர் த்ரீ: நூறு ஏக்கர் நிலப்பரப்பில் காட்டை அழித்து டீ பயிரிட அனுமதி அநேகமாகக் கிடைத்த மாதிரிதான். பேப்பர் இன்று கையெழுத்தாகி விடும் என்று தெரிந்து கொண்டேன். நாலாவதாக, சென்னை வரும் போது உங்களைச் சந்திக்கச் சொன்னீர்கள்.... கடைசியாகத் தூண் போல நின்ற கிருதாவை எடுத்தாகி விட்டது என்பதையும் உங்கள் கவனத்துக்குக் கொண்டு வர விரும்புகிறேன்.'' — டப்பென்று நோட்டுப் புத்தகத்தை மூடி, பாக்கெட்டுக்குள் செருகிக் கொண்டான் சாரங்கன்.

சாருலதா கலகலவென்று ஆனால் அதிகமாக ஓசைப்படுத்தாமல் சிரித்தாள். ''நீங்கள் கடைசியாகச் சொன்னதைத்தான் நான் முதலில் கவனித்தேன்'' என்றாள். சட்டென்று அதிகார தோரணையில் அவள் முக பாவம் மாறியது. '' சாரங்கன் ! உங்களை எஸ்டேட் மானேஜர் பதவியிலிருந்து இன்று முதல் 'டிஸ்மிஸ்' செய்து விட்டேன்'' என்றாள்.

சாரங்கன் வெலவெலத்துப் போனான். அடுத்த விநாடி அவனுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. விருட்டென்று அவன் எழுந்த வேகத்தில் நாற்காலி பின்னுக்குத் தள்ளப்பட்டது. ஆனால் தரையில் மிருதுவான கம்பளம் விரிக்கப்பட்டிருந்ததால் அது நகர முடியாமல் குடை சாய்ந்து விழுந்தது. முகம் சிவக்க அவன் நின்றான். தன்னை ஒரு நிலைப்படுத்திக் கொண்டு கோபத்தை வெளியிட வார்த்தைகளைத் தேடினான். அதற்கு முன்னால் சாருலதா மீண்டும் பேச ஆரம்பித்தாள்:

'' அதற்குப் பதில் உங்களை இங்கே என்னுடைய பிரைவேட் செகரட்டரியாக நியமிக்கிறேன். சாரங்கன் ! எஸ்டேட் மானேஜர் என்ற முறையில் நீங்கள் என்ன சம்பளம் வாங்கினீர்கள் ?''

இந்த இரண்டாவது அதிர்ச்சி சாரங்கனின் கண்களை அகல விரிய வைத்தது. சூடாகப் பேச முற்பட்ட அவன் இப்போது சொற்களை மென்று விழுங்கிக் கொண்டிருந்தான். அவள் கேள்விக்கு அவன் பதிலளிக்கு முன் இன்டர்காமில் ரிஸப்ஷனிஸ்ட் லில்லியின் குரல் ஒலித்தது :

''கைலாசம் போனில் இருக்கிறார். உங்களுடன் பேச வேண்டும் என்கிறார்.''

'' நான் பிஸியாக இருக்கிறேன் ; அப்புறம் ஃபோன் பண்ணச் சொல்லு.''

''ரொம்ப அவசரம் என்றார். அதனால்தான்....''

''சரி, டெலிபோன் கனெக்ஷன் கொடு !'' என்றாள் சாருலதா.

மேஜையின் மேலிருந்த நாலு டெலிபோன்களில் ஒன்று கணகணவென்று ஒலி எழுப்பியது. கருப்பு ஃபோனை எடுத்துப் பேசினாள் சாருலதா. ''சாரு ஹியர் ! கைலாசம், நான் ரொம்ப பிஸியாக இருக்கேன். ஐந்து நிமிஷங்கள் கழித்துப் பேசுகிறேன்'' என்றாள்.

போனை வைத்துவிட்டு உடனே மேஜையின் மேல் இருந்த டெலிபோன் எண்களை எழுதி வைக்கும் சிறிய நோட்டுப் புத்தகத்தைப் பிரித்தாள். சாருலதா இன்ஜினீரிங் கம்பெனியின் மானேஜர் கைலாசத்துக்கு இருந்த பர்ஸனல் டெலிபோன் நம்பரைப் படித்து விட்டு, வெள்ளை நிற டெலிபோனை எடுத்து எண்களைச் சுழற்றினாள். ''யார் ? கைலாசமா ? என்ன விஷயம்? ரொம்ப அவசரம் என்பதால் என்னமோ ஏதோ என்று பிரைவேட் லைனில் கூப்பிட்டேன். ஸ்விட்ச்போர்டு மூலம் வரவேண்டாமே....''

சற்று நேரம் கேட்டுக் கொண்டிருந்தாள் சாருலதா. பிறகு பேசினாள் : ''டெண்டர் தொகை எவ்வளவு ?.... சரி, நாளைக்குத்தான் முடிவு செய்கிறார்களாமா? நிச்சயம் தெரியுமா?... ஜோஷியைத்தானே நான் பார்க்கணும் ? அவரை மட்டும் பார்த்துப் பேசினால் போதுமா ?.... ஆல்ரைட் கைலாசம் ! நான் கவனித்துக் கொள்கிறேன்.... டோண்ட் வொர்ரி.... நாளைக்குக் காலையில் ஃபோன் பண்ணுங்கள். இப்போ நான் குறித்துக் கொள்ள வேண்டிய நெம்பர், வேறு விவரங்கள் ஏதாவது இருந்தால் சொல்லுங்கள்....''

சாருலதாவின் கரம் செவிகளில் விழுந்ததை எழுதிக் கொண்டது. ''ஓ.கே.'' என்று கூறி ஃபோனை வைத்து விட்டு நிமிர்ந்தாள்.

''நாம் என்ன பேசிக் கொண்டிருந்தோம் ? எஸ்.... உங்கள் சம்பளம்?''

''ஆயிரம் ரூபாய் வாங்கினேன்.''

''சரி, என்னுடைய அந்தரங்கக் காரியதரிசி என்ற முறையில் உங்களுக்கு இனி ஆயிரத்து இருநூறு கிடைக்கும். ஆண்டுதோறும் ஐம்பது ரூபாய் இன்கிரிமெண்ட். அதிகபட்சம் இரண்டாயிரம் வரையில் சம்பளம் உயரும். சரிதானா ?''

''அங்கே எனக்குக் காரும், வீடும் இருந்தன.''

''அவை இங்கேயும் உங்களுக்கு உண்டு.''

''வேலைக்காரன் இருந்தான்.''

''இங்கும் ஸர்வண்ட் அலவன்சுக்கு ஏற்பாடு செய்யலாம். சாரங்கன் உங்கள் முதல் வேலை என்ன தெரியுமா ? என் எஸ்டேட்டுக்கு உங்களைப் போலவே அல்லது உங்களைவிடத் திறமைசாலியான மானேஜரைக் கண்டு பிடித்து நியமிப்பதுதான்.''

''செய்கிறேன்.''

''டேப் ரிகார்டர் எங்கே?'' என்றாள் சாரு, புன்முறுவலுடன்.

சாரங்கன் டேப் ரிகார்டரைப் பயன்படுத்தினான்.

'' வாசலில் ரிஸப்ஷனிஸ்ட் இருக்கும் இடத்துக்குப் பக்கத்தில் ஓர் அறை காலியாக இருக்கிறது. அங்கு டைப்பிஸ்ட் உமாவை அனுப்பி விட்டு, அவள் இப்போது உள்ள அறையை நீங்கள் எடுத்துக் கொள்ளுங்கள். அவளிடமே உங்களுக்கு அப்பாய்ண்ட்மெண்ட் ஆர்டரும் டிஸ்மிஸல் ஆர்டரும் டிக்டேட் பண்ணி டைப் செய்து எடுத்து வாருங்கள். கையெழுத்துப் போடுகிறேன்.''

நிர்வாக ரீதியில் வேறு பல முக்கிய காரியங்களையும் அவள் கொடுத்தாள்.

சாரங்கன் அவ்வப்போது டேப் ரிகார்டரில் உத்தரவுகளைப் பதிவு செய்து கொண்டான்.

சற்று முன்னால் தான் டெலிபோனில் கேட்டு எழுதிக் கொண்ட விவரங்களைச் சாரங்கனிடம் தந்தாள் சாருலதா. ''இதை நீங்களே உங்கள் கைப்பட டைப் செய்து எடுத்து வாருங்கள். 'லெட்டர் ஹெட்' வேண்டாம். 'பிளெய்ன் பேப்பரி'ல் இருக்கட்டும். வேறு யாருக்கும் தெரியவும் வேண்டாம். பிறகு இங்கே வந்து பிரைவேட் லைனில் ஜோஷிக்கு ஃபோன் போட்டு கிரீன்லாண்ட்ஸ் ஹோட்டலில் என்னைச் சந்திக்க முடியுமா என்று கேட்டுச் சொல்லுங்கள். அவருக்கு எப்போது முடியுமோ அப்போது ஸ்விம்மிங் பூல் அருகே என்னை 'மீட்' பண்ணலாம் என்று கூறுங்கள். லஞ்ச் அல்லது டீ எதுவானாலும் கிரீன்லாண்ட்ஸுக்கு ஃபோன் செய்து டேபிள் ரிஸர்வ் பண்ண வேண்டும். இப்போதைக்கு அவ்வளவுதான். வேறு ஏதாவதிருந்தால் இண்டர்காமில் உங்களைக் கூப்பிடுகிறேன்.''

சாரங்கன் எழுந்தான். கதவருகே அவன் சென்றதும், ''சாரங்கன் ! ஒன் மினிட் ! அந்தரங்கக் காரியதரிசி உத்தியோகம் என்பது ரொம்பப் பொறுப்புள்ள பதவி என்பது மட்டுமல்ல; நான் கூறும் விஷயங்களை உண்மையாகவே அந்தரங்கமாக வைத்துக் காக்க வேண்டும், நீங்கள் ! புரிகிறதா, நான் சொல்வது?'' என்றாள்.




விண்வெளி விஞ்ஞானிக்குப் பிரத்தியேகமான உடை அணிவிக்கப்படாவிட்டால் என்னவாகும்? காற்றில்லாத வானவெளியில் செல்லும் போது அவனது இரத்த நாளங்கள் வெடித்து, உடலிலிருந்து இரத்தம் கசியும், விழிகள் பிதுங்கிக் கொண்டு வந்துவிடும்!

சாரங்கன் தலையை ஆட்டினான். "பிஸினஸ் ஸீக்ரட்ஸ் பலவற்றை நீங்கள் தெரிந்து கொள்ள நேரலாம். ஆனால் உங்களைப் பார்த்ததுமே எனக்கு உள்ளுணர்வு சொல்லிற்று. நீங்கள் நம்பகமான முறையில் விசுவாசத்துடன் நடந்து கொள்வீர்கள் என்று. அதனால்தான் உங்களை இங்கே தருவித்துக் காரியதரிசியாக நியமித்திருக்கிறேன்!"

"நம்பிக்கைத் துரோகம் செய்ய மாட்டேன், சாரு!"

"சத்தியம் என்ற சொல்லுக்கு மதிப்பு ரொம்பவும் குறைந்து வருகிற காலம் இது. நீங்கள் அப்படிப்பட்டவர் இல்லை என்று நம்புகிறேன். அந்த டேப் ரிகார்டர்...... அதை யாரிடமும் எப்போதும் தராதீர்கள். என்னுடைய உத்தரவுகளை நிறைவேற்றியதும் டேப்களை அவ்வப்போது அழித்து விடுங்கள்."

"ஆல்ரைட்! கவலையே வேண்டாம் உங்களுக்கு."

**சா**ரங்கன் போனதும் சாருலதா மேஜை டிராயர் ஒன்றை இழுத்துத் திறந்து அதிலிருந்து ஒரு நீண்ட கனமான நோட்டுப் புத்தகத்தை எடுத்து மேலட்டையைப் புரட்டினாள். உள்ளே பக்கங்களின் ஓரங்கள் அளவாக வெட்டப்பட்டு ஏ, பி, ஸி, டி குறிகள் இடப்பட்டிருந்தன. 'ஜே' என்ற எழுத்து இருந்த பக்கத்தைத் திருப்பினாள். அந்த எழுத்தில் ஆரம்பித்த நான்கு பெயர்களும் அவர்களைப் பற்றிய சிறு குறிப்புக்களும் இருந்தன. ஜோஷியைப் பற்றிப் படிக்க ஆரம்பித்தாள் அவள்.

"காதல் திருமணம். மனைவி நல்ல அழகி. குடும்பப் பற்று மிகுந்தவர். ரசிகர். கலை உள்ளம் மிக்கவர். எலைட் கிளப்பில் சந்தித்த போது பிடித்த நிறம் மஞ்சள் என்று குறிப்பிட்டிருக்கிறார். ரேஸுக்குப் போவதுண்டு."

சாருலதா நோட்டுப் புத்தகத்தை மூடி வைத்து விட்டு ஒரு நிமிஷம் சிந்தித்தாள். பின்னர் எழுந்து தனது காரியாலய அறைக்குப் பக்கத்தில் இருந்த மற்றோர் அறையின் கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்றாள்.

அங்கு ஓர் அலமாரியில் இருந்த பல புடவைகளை ஆராய்ந்தாள். மஞ்சள் நிறத்தில் இரண்டு புடவைகள் இருந்தன. பட்டுப் புடவை வேண்டாம் என்று ஒதுக்கிவிட்டு 'லெமன் எல்லோ' நிறத்தில் ஷிபான் ஸாரியைப் பொறுக்கிப் பக்கத்திலிருந்த டிரெஸ்ஸிங் டேபிள் மீது வைத்தாள். மறுபடியும் அலமாரிக்குள் நோட்டம் விட்டு நீச்சல் உடைகள் பலவற்றுள் ஒன்றைத் தேர்ந்தெடுத்துத் தனது ஹாண்ட் பாக்கில் மடித்து வைத்தாள். புடவைக்கு ஏற்ற மாதிரி ஒரு ஜாக்கெட்டையும் பொறுக்கி எடுத்தாள். இரண்டு விதமான ஃப்ரேம்களுடன் கூடிய இரண்டு கறுப்புக் கண்ணாடிகளை ஒன்று மாற்றி ஒன்றாகக் கண்ணுக்கு அணிந்து பார்த்து ஒன்றைத் தேர்ந்தெடுத்துப் புடவையுடன் சேர்த்துத் தயாராக வைத்தாள்.

மறுபடியும் காரியாலய அறைக்குத் திரும்பி, ஜோஷி பற்றியோ, அவர் ஒப்புதல் தர வேண்டிய 'டெண்டர்' பற்றியோ கவலை ஏதுமின்றி அன்றாடக் காரியாலய அலுவல்களைக் கவனிக்க ஆரம்பித்தாள். **(தொடரும்)**

# எந்தக் காரணத்தால் உங்களுக்குத் தலைவலி வந்தாலும், அதைப் போக்க ஒரே ஒரு ஸாரிடான் போதும்!

தலைவலி பலவிதம். எந்தக் காரணத்தால் உங்களுக்குத் தலைவலி வந்தாலும், அதை விரைவில் போக்க ஒரே ஒரு ஸாரிடான் சாப்பிட்டால் போதும். ஸாரிடானில் சேர்க்கப் பட்டுள்ள கலவைப் பொருள்கள் தலைவலி, உடல்வலி மற்றும் பல்வலியுடன் கூடவே அனுபவமாகும் சோர்வையும் போக்குகின்றன; மற்றும் இதமளித்து புத்துணர்ச்சியும் ஊட்டுகின்றன. அதுவே ஸாரிடானின் தனிச் சிறப்பு!

**ஸாரிடான்**



'ரோஷ்'




HTA-VT-8421-A, 'ரோஷ்' தயாரிப்பு — ஏகபோக விநியோகஸ்தர்கள்: வால்டாஸ் லிமிடெட்




கடந்த ஒரு வார காலமாகத் தான் அளித்து வந்த அறிவுரைகள், உபதேச மொழிகள், அனுபவக் கூற்றுக்கள், மேற்கோள்கள் ஆகியவற்றை நாராயணன் நன்குகப் புரிந்து கொண்டிருக்கிருனு என்று அறியும் பொருட்டு அவன் எதிரே வந்து நின்ருள் பவானி.

"நான் சொன்னதெல்லாம் நினைவிருக்கிறதல்லவா?"

"எதைச் சொல்கிருய் நீ?" என்று பதில் கேள்வி கேட்டான் நாராயணன்.

"எதையா? பாழாய்ப் போச்சு போங்கள். ஏழெட்டு நாட்களாய் நான் கரடியாய்க் கத்திக் கொண்டிருக்கிறேன்..."

"ஆமா, ஆமா. இப்போ புரிந்துவிட்டது. கல்யாணத்துக்குப் போகும் துணிகளையும் மற்றச் சாமான்களையும் விட்டு விடாமல், தொலைக்காமல், மறந்து போகாமல் திருப்பிக் கொண்டு வந்து விட வேண்டும். அவ்வளவு தானே?"

பவானி இடுப்பில் கைகளை வைத்துக் கொண்டு — பண்டரிபுரத்து விட்டோபா பாணியில் கணவனை-முறைத்துப்-பார்த்தாள்.

"என்ன 'அவ்வளவுதானே?'... இன்னும் இருக்கிறது" என்று தூண்டி விட்டாள்.

நாராயணன் நெற்றியைத் தடவி விட்டுக் கொண்டான்.

"இதோ, நினைவுக்கு வந்து விட்டது, பவானி!"

"சொல்லுங்கள்."

"மதுரையில் நடக்கும் கல்யாணத்துக்குப் போய்விட்டுத் திரும்பும்போது, திருச்சியில் இறங்கி உன் பெரியம்மா வீட்டில் ஒரு நாள் தங்கிவிட்டு வரணும்!... அவ்வளவுதானே?"

உச்சந்தலையில் உள்ளங் கையால் இரண்டு அடித்துக் கொண்டு நாற்காலியில் சாய்ந்தாள் பவானி.

"ஐயோ!... திடீர்னு மயக்கம் வந்துட்டதா பவானி?... தண்ணீர் தெளிக்கட்டுமா, முகத்தில்?... அட கள்ளி! என்னிடம் கூடச் சொல்லவில்லையே?...... இது எத்தனாவது மாசம்?..."

பவானி துர்க்கையாகச் சீறினள்.

"எனக்கு மயக்கமும் இல்லை, மண்ணாங் கட்டியுமில்லை. உங்கள் மேல் எனக்கு எரிச்சல் தான் வருகிறது."

"ஏன், பவானி?"

"உங்களுக்கு இன்னுமா புரியவில்லை? எவ்வளவு தடவை பன்னிப் பன்னிச் சொன்னேன்....?" அடைத்துக் கொண்ட தொண்டையைச் சரிப்படுத்திக் கொண்டு மீண்டும் பேசினாள்: "எதற்காகச் சொன்னேன்? உங்களுக்குப் பெருமை வரவேண்டும் என்பதற்காகத்தானே? உங்களுக்கே சுயமாகக்கொஞ்சம் 'இன்ட்ரஸ்ட்' இருக்கணும். ஏதடா, நம்முடைய ஷட்டகரை வாய்க்கு வாய் புகழ்ந்து தள்ளுகிறாரே, மாமனார்; நம்மைப் பற்றியும் அவர் பெருமையாகப் பேசணும் — என்கிற எண்ணம் உங்களுக்கே இருக்கணும்..."

நாராயணனுக்கு இப்பொழுதுதான் பளிச் சென்று உதயமாயிற்று.

"ஓ, அதைச் சொல்லுகிறாயா, பவானி?... அதுதான் என் மனத்தில் படு ஆழமாய்ப் பதிந்து விட்டதே! நான் மறப்பேனா, பவானி? நிச்சயமாக இந்தக் கல்யாணத்தில் கையும் களவுமாய்த் திருடனைப் பிடிக்காவிட்டால், 'ஏன்?' என்று கேள்!..."

"அப்பாடா... இனிமேலாவது மறக்காமல் இருங்கள்" என்று எச்சரித்துவிட்டுத் தான் பவானி நகர்ந்தாள்.

பவானியின் மாமா பெண்ணின் திருமணம் போன வருஷம் சிதம்பரத்தில் நடந்தது. அவருக்குத் தன் சகோதரி வழி உறவைத் தவிர வேறு உறவினர்கள் இல்லையாதலால் சகோதரியோடு அவள் மாப்பிள்ளைகளையும் வற்புறுத்தி அழைத்திருந்தார். பவானி — நாராயணனைப் போலவே அவளுடைய அக்கா கோகிலமும் அவள் கணவர் வேணுகோபாலனும் அந்தத் திருமணத்துக்குப் போயிருந்தார்கள். திருமணத்தில் சந்தேகாஸ்பதமான ஒருவரிடத்தில் குறிப்பாய்க் கண்ணை வைத்து ஓர் எவர்சில்வர் தட்டை அவர் திருடி மறைக்கும்போது அவரைப் பிடித்து விட்டான், வேணுகோபாலன். அந்த நிமிஷத்திலிருந்து திருமண மாப்பிள்ளையைக் காட்டிலும் நடுநாயகமாகப் போய்விட்டான் வேணு. அவனுடைய அபார சாமர்த்தியத்தையும் உளவறியும் அறிவுத் திறனையும் துணிச்சலையும் பற்றி அடுக்கடுக்காகப் பேசினார், வேணுவின் மாமனாரான மார்க்கசகாயம். கோகிலாவின் தலை கழுத்தில் நிற்க மறுத்தது. ஏதோ லட்ச ரூபாய்த் திருட்டைத் தானே கண்டுபிடித்துவிட்டதைப் போலக் கர்வப் பட்டுக் கொண்டாள். 'வேணு எப்பவுமே அப்படித்தான்னா!.... அவன் கண் இருக்கே, எதிராளியைத் துளைத்துப் பார்த்துவிடும்!...அவன் இருக்கிற இடமே கலகலன்னு பூத்துக் குலுங்கும்' என்று மார்க்க சகாயம் விமரிசித்தபோது பவானி, தனக்குள் குமைந்தாள். அக்கா, கோகிலா, தன்னை வெகு அலட்சியமாக, ஏளனமாகப் பார்ப்பது போல் தோன்றியது பவானிக்கு.

இந்தப் புகழ் புராணம் அந்தத் திருமணத்தோடு நின்றுவிடவில்லை. படலம் படலமாக விரிந்தது. நாலு பேர் சேர்ந்திருக்கிற இடங்களில் தன் மூத்த மாப்பிள்ளையின் அருமை பெருமைகளைப் படு அக்கறையுடன் பறைசாற்றி வந்தார் மார்க்க சகாயம். 'என் மாப்பிள்ளை இருக்கிறானே — வேணுவைச் சொல்கிறேன் — மகா புத்திசாலி. மச்சினன் பெண் கல்யாணத்துக்குப் போயிருந்தோமா? அங்கே ஒரு பயல் அகப்பட்டதையெல்லாம் சுருட்டிக் கொண்டு போகப் பார்த்தான். நம்ம வேணு இருக்கானே...' என்று ஆரம்பித்து நடந்துபோன சிறிய சம்பவத்துக்குக் கண் காது மூக்கு வைத்து ஒரு மாபெரும் பகற் கொள்ளைக்காரனைக் கண்டு பிடித்ததாக அட்டகாசமாய் விவரிப்பார்.

பவானிக்கு ஆத்திரம் பொங்கிக் கொண்டு வரும். பத்து ரூபாய் பெறுமானமுள்ள ஒரு பிளேட்டை மீட்ட சம்பவத்துக்கு ஒரு சரித்திர முக்கியத்துவம் கொடுத்துப் பேசும் தந்தையின் மேல் எரிச்சல் வரும். மூத்த மாப்பிள்ளையை உயர்த்தி உயர்த்திப் பேசுவதன் பொருள் என்ன? அடுத்த மாப்பிள்ளை மட்டமானவன் என்பதுதானே? இவரும் அவரைப் போலவே சாமர்த்தியசாலி என்பதை நானே முயன்று நிரூபித்துக் காட்டுகிறேன்...

நாராயணனின் உறவுப் பையனுக்குக் கல்யாணம் மதுரையில். பையன் துர்க்காபூரில் இஞ்சினியர். பெண் பெரிய இடம். திருமணத்துக்கு நிறையச் செலவழிக்கிறார்களாம்.

அந்தத் திருமணத்தில் ஒரு திருட்டுக்கூட நடக்காமலா போய்விடும்? எவர்சில்வர் என்ன பீற்றல் எவர்சில்வர்! அசல் வெள்ளியே திருட்டுப் போகும்! அதைமட்டும் நாராயணன் கண்டுபிடித்து விட்டால், கோகிலாவைத் தூக்கி எறிந்து பேசலாம். பின் பவானியின் பெருமை கொடி கட்டிப் பறக்கும்!

அன்று இரவு சாப்பிட்டு முடிந்து படுக்கப் போகும் நேரத்தில், "நாம் என்றைக்கு மதுரைக்குப் புறப்படுகிறோம்?" என்று ஆவலோடு கேட்டாள் பவானி.

"எதற்கு?"

"கல்யாணத்துக்கு."

"போவதா வேண்டாமா என்று இன்னும் நிச்சயம் செய்யவில்லை, பவானி."

"நாம் அந்தக் கல்யாணத்துக்கு நிச்சயம் போக வேண்டும்."

"பார்த்துக் கொள்ளலாமே?"

"இல்லை. நீங்கள் சரியென்று சொன்னால் தான் எனக்குத் தூக்கம் வரும்."

"சரி."

அப்புறம் பவானிக்கு உறக்கம் வரவில்லை. தான் கேட்ட, கேட்டறியாத, நடந்த, நடந்திராத, தெரிந்த, தெரிய வராத கல்யாணத் திருட்டுக்களை யெல்லாம் நினைவுபடுத்திக் கொண்டாள்.

மறு நாள் போது விடிந்ததிலிருந்து நாராயணனுக்குப் போதனை ஆரம்பமாயிற்று.

காப்பி கொடுக்கும்போது, 'கல்யாணத் திருடர்கள் கண்ணியமாகத்தான் கண்ணுக்குப் படுவார்கள். அசல் மாப்பிள்ளை மாதிரியே இருப்பார்கள்' என்று முதல் டோஸையும் சேர்த்துக் கொடுத்தாள்.

நாராயணன் சாப்பிட உட்கார்ந்தான். பவானி ஆரம்பித்தாள். "...மாப்பிள்ளையின் கூடப் பிறந்தவர் மாதிரி உருட்டல்

எங்கள் பலம் எஃகும், மக்களுமே. மனிதன் வெறும் உணவினால் மட்டுமே உயிர் வாழ்வதில்லை. ஆதலால் நாங்கள் ஜாம்ஷெட்பூரில் இசை, நடனம் மற்றும் மனிதனுடைய உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் இதர கலைகளையும் பேணி வளர்த்து வருகிறோம்.

**டாடா ஸ்டீல்**

மிரட்டல் எல்லாம் இருக்கும். அப்போத் தானே ஒருவரும் சந்தேகிக்க மாட்டார்கள்! ஓடியாடி வேலை செய்வார்கள். சந்தனப் பேலா எங்கே, பன்னீர்ச் செம்பு எங்கே என்று யாரையோ வரவேற்கப் போவது போல் கன அக்கறையோடு தேடுவார்கள். இவர்களை ரொம்ப உன்னிப்பாய்க் கவனிக்க வேண்டும்!''

மாலையில் பூங்காவில் உட்கார்ந்திருக்கும் போதும் விடவில்லை. ''சுமதியின் தங்கை யோட கல்யாணத்தில் என்ன நடந்தது, தெரியுமோ?...'' என்று தொடங்கி யாரோ எதையோ திருட முயன்றதாகக் கூறப் பட்ட நிகழ்ச்சியை அரை மணி நேரம் விவ ரித்துவிட்டுத்தான் ஓய்ந்தாள்.

ஆக நாள்தோறும் அவனைக் கொட்டிக் கொட்டித் திருமணத் திருட்டுக்களைக் கண்டு பிடிக்கும் துப்பறிவாளனாக நாராயணனை மாற்றிக் கொண்டிருந்தாள் பவானி.

எதிர்பார்த்தபடியே மதுரைத் திருமண ஏற்பாடுகள் விரிவாகச் செய்யப் பட்டிருந் தன. கும்மாளத் துக்கும் குதூகலத் துக்கும் குறைவே இல்லை. நின்று கொண்டே பேசி னர் சிலர் என்றால்



பேசிக் கொண்டே சென்றனர் மற்றும் சிலர்.

நாராயணன் யாரிடமாவது கல கலப்பாகப் பேச வேண்டுமே? ஊஹூம்! அவன் நினைவெல்லாம் திருட்டைக் கண்டு பிடிப்பதிலேயே இருந்தது. 'இவ்வளவு பெரிய கூட்டத்தில் கட்டாயம் ஒருவனாவது திருட வந்தவனாக இருப்பான்.' இறைந்து கிடக்கும் வெள்ளித் தாளங்கள், டவரா டம்ளர்கள் நாரீமணிகளின் உடல்களை அலங்கரிக்கும் ஆபரணங்கள் முதலியவற்றையே கணக் கிட்டுக் கொண்டிருப்பான்.

அந்தக் கயவனை அவசியம் கண்டுபிடித் தாக வேண்டும். அவனுக்காக இல்லாவிட் டாலும் பவானிக்காகவாவது நாராயணன் கையில் சிக்க வையேன், தேற மீனாட்சி!

அதோ, வாயில் வெற்றிலையைப் போட்டுக் குதப்பிக் கொண்டிருக்கிறாரே, அவருடைய பார்வை... அவ்வளவு நன்றாக இல்லைபோல் இருக்கிறதே? பார்த்தால் கௌரவமானவ ராகத்தான் இருக்கிறார். பின்னே, 'நான் திருடன்' என்று நெற்றியில் எழுதி ஒட்டிக் கொண்டா வருவார்?... அவரை ஃபாலோ பண்ண வேண்டியதுதான்.

நாராயணன் அவர் அருகே சென்றான்.

''சாருக்கு என்ன ஊரோ?''

அவர் கழுத்தை உயர்த்தி, மூகர மொழி யில் ஏதோ சொன்னார்.

நாராயணனுக்குப் புரியா விட்டாலும் தலையை அசைத்து வைத்தான்.

''உங்களை எங்கோ பார்த்தமாதிரி இருந் தது. அதனால்தான் கேட்டேன்...''

அவர் பதில் கூறாமல் வெறுமனே புன் சிரிப்புச் சிரித்தார்.

என்ன காரணத்தாலோ நாராயணனுக்கு அவர் மேல் ஏற்பட்ட சந்தேகம் வலுப் பட்டு விட்டது. ஆனால் அவர் கையில் பையைக் காணோம். வெள்ளித் தாம்பா ளத்தை எங்கே மறைத்துக் கொள்வார்? பனியனுக்குள் வைத்துக் கொண்டால் மார் போடு ஒட்டிக் கொண்டு விடும் இல்லையா? எனவே எப்படியாவது அவரைச் சோதனை செய்துவிடத்தான் வேண்டும் என்று நாரா யணன் எண்ணிக் கொண்டிருக்கையில்,....

'மாமா! இங்கேயா இருக்கிறீர்கள்? அப்பா உங்களைத் தேடிக் கொண்டிருக்கிறார்' என்று கூறி, அவரை அழைத்துப் போனான் மணப் பெண்ணின் தம்பி!

ஒரு தடவை பாரீஸ் செய்தித்தாள் ஒன்றில் இப்படி ஒரு விளம்பரம் வந்தது: 'எனக்கு ஒரு பெட்ரோல் நிலையத்தில் அல்லது தீப்பற்றக்கூடிய பொருள்களைத் தயாரிக்கிற தொழிற்சாலைகளில் வேலை வேண்டும். ஏனென்றால், நான் புகைப் பிடிப்பதை விட்டுவிட விரும்புகிறேன்.'

'பிழைத்தேன்!... நல்ல காலமாக, நான் அவசரப்பட்டு விடவில்லை' என்று தனக்குள் மகிழ்ந்து கொண்டான் நாராயணன்.

தான் உளவு பார்த்ததைப் பவானி கவ னித்துக் கொண்டிருக்கிறாளா என்ற பேராவல் அவனுள் எழுந்தது. பெண்கள் பகுதியில் பார்வையைச் செலுத்தினான். வைரமும் பட்டும் பளிச்சிட்டனவே தவிரப் பவானியின் முகமே தென்படவில்லை. அவள் எங்கே போய் விட்டாள்? இரண்டே நிமிடத்தில் எந்தப் புது மனுஷியோடும் சிநேகம் செய்து கொண்டு விட முடியும் அவளால். இதற்குள் அரை டஜன் ஆருயிர் நண்பிகளையாவது அவள் சேர்த்திருக்க மாட்டாளா?

நாராயணன் கொஞ்சம் அருகே போய்ப் பார்த்தான். மாமா பேத்தி, சித்தப்பா பெண், அம்மங்கார், நீலா, ஜகதா... இவர்கள் தென்பட்டார்களே தவிர பவானியைக் காணவில்லை. கழுத்தை நீட்டி நீட்டிப் பார்த்ததுதான் மிச்சம்!

திரும்புகையில் அவன்மேல் இடித்துக் கொண்டு ஒரு விசிறி மடிப்புக்காரர் சந் தனப் பேலாவை எடுத்துக்கொண்டு போனார். யாரை வரவேற்கப் போகிறார், இவர்? வர

வேட்கப் போகிறாரா, பேலாவை அமுக்கிக் கொண்டு போகப் பார்க்கிறாரா?... இப்படித் தான் ரொம்பவும் உதவி செய்வதைப் போல் நடிப்பார்கள், திருடர்கள். அப்போது தானே, மற்றவர்கள் கண்ணில் மண்ணைத் தூவலாம்!

ஆனால், நாராயணனா ஏமாறுகிறவன்?— விசிறி மடிப்புக்காரரை நிழல்போல் தொடர்ந்தான்.

வாசற்புறத்துப் படிகள் வழியே அவர் மாடிக்குப் போனார். நாராயணன் தன்னை உஷார்ப்படுத்திக்கொண்டான். ''நாராயணா, கவனமாக இரு. மாடியில் இப்போது என்ன வேலை, அந்த மனிதருக்கு? மாடியில் அவர் தம்முடைய பை அல்லது பெட்டியை வைத்திருக்கக் கூடும். அதில் இந்தப் பேலாவை மறைத்து வைத்து விட்டுச் சாது போல் திரும்பி வருவார் அவர். பயப்படாதே. லபக்கென்று பிடித்துக் கொள். அப்புறம் கன்னத்தில் ஓர் அறை. அவர் திரும்பி அடிக்க முற்படுவதற்குள் பத்துப் பேர் உன் துணைக்கு வந்துவிடுவார்கள்!..... தயங்காதே, போ, போ!.. உனக்கு முன் வேறு யாரேனும் அந்தத் திருட்டைக் கண்டுபிடித்து விட்டால், நீ ஒரு மகத்தான வாய்ப்பை இழந்தவன் ஆவாய்... பவானி உன்னைத் தூற்றுவாள்!... வாழ்க்கையில் நல்வாய்ப்புக்கள் மிகவும் குறைவாகத்தான் கிட்டுகின்றன. விசிறி மடிப்பை நழுவ விட்டு விடாதே...''

படியேறி மாடியில் அவன் கால் வைத்ததும் பார்த்த காட்சி...!

'...சாம்பு என்று பெயர். ஒண்ணுங் கிளாஸிலேருந்து சிநேகிதம்!... அவன் வேறு, நான் வேறு இல்லே!' என்று விசிறி மடிப்புக்காரரை யாருக்கோ அறிமுகம் செய்து கொண்டிருந்தார் நாராயணனின் மாமா!

பந்தல் ஓரமாக ஒரு நாற்காலியில் வந்து உட்கார்ந்து கொண்டான், நாராயணன். அவன் மனம் சோம்பிக் கிடந்தது. எவ்வளவு பெரிய அதிருஷ்டக் கட்டை அவன்! இந்தக் கூட்டத்தில் ஒரு சிறு திருட்டுக்கூட நேர்ந்ததாகப் புகார் ஏற்படவில்லையே?... அப்படி ஒரு திருட்டுக்கூட ஏற்படா விட்டால் இதென்ன பெரிய கல்யாணம்!

பனிச்சென்று விளக்குகள் எரிய ஆரம்பித்தன. ஆயிற்று, இன்னும் இரண்டு மணி நேரம் போனால் இரவு விருந்து ஆரம்பமாகும். அப்புறம் அவரவர் படுக்கையைக் கட்டிக் கொண்டு புறப்பட்டு விடுவார்கள். அப்புறம் கூட்டம் குறைந்து போனால் யார், எதைத் திருட முடியும்?

அப்படியானால், இப்பொழுதோ அல்லது இன்னும் சற்றைக்கெல்லாமோ திருட்டு நடந்தாக வேண்டும். வெளிச்சத்தில் திருட்டை நடத்த முடியாது. விளக்குகள் அணைய வேண்டும்; அதாவது, அணைக்க வேண்டும்!

நாராயணனின் உடம்பில் திடீரென்று புத்துணர்ச்சி பரவிற்று. அவன் மூளை மின் வேகத்தில் வேலை செய்யத் தொடங்கியது.

ஸ்விச் போர்டு எங்கே இருக்கிறது, இந்தக் கட்டிடத்தில்? அதை முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். பின் மெயின் ஸ்விச் எது என்பதையும் கண்டுபிடிக்க வேண்டும். கூடியவரை அதன் அருகிலேயே பிறர் கவனத்தைக் கவரா வண்ணம் நடமாடிக் கொண்டிருக்க வேண்டும். அப்போதுதான் திட்டமிட்டுள்ளபடி திருடனின் கையால் வந்து மெயின் ஸ்விச்சை அணைக்க முயலும் போது பின்னாலிருந்து அவன் மென்னியை அமுக்கலாம்!....

நாராயணன் உடனே எழுந்தான். ஒரு நிமிஷம் தாமதம்கூட, ஒரு பேரிழப்புக்குக் காரணமாயிருக்கலாம் என்று அவன் உள்ளுணர்வு உணர்த்திற்று.

அவன் எப்படியும் இந்த வீரச் செயலைப் புரிந்தே ஆக வேண்டும். இல்லாவிட்டால் அவனுடைய பிரயாணம் வீண்! முயற்சிகள் வீண்! பவானியின் நம்பிக்கை வீண்!

இன்னொரு சந்தர்ப்பத்துக்காக அவன் காத்திருக்க முடியாது.

அவன் நடந்தான். கண்கள் நாற்புறமும் சுழன்றன. ஸ்விச் போர்டைக் கண்டதும் நின்றன. அதில் மெயின் ஸ்விச் எது? அருகே சென்று பார்த்தால்தான் தெரியும். கண்ணால் பார்த்தால் மட்டும் போதாது; ஒரு தடவை கையால் அசைத்துப் பார்க்க முடியுமானால்...

நாராயணன் நடந்தான், அந்தப் பக்கத்தில் ஏதோ காரியம் உள்ளவன் போல. அதோ, அதுதான் மெயின் ஸ்விச்சாக இருக்க வேண்டும். அதை அமுக்கினால் அந்தப் பெரிய கட்டிடம் அந்தகாரத்தில் அமிழ்ந்து விடும்!....

நாராயணனிடம் தவிர்க்க முடியாத ஒரு தவிப்பு ஏற்பட்டது. கைகள் பரபரத்தன.

பக்கத்தில் எவருமில்லை.

அவன் நெருங்கி விட்டான், ஸ்விச் போர்டை. கை நீண்டது. நீண்டு...

...ஆ! இது என்ன, கழுத்துப் பக்கத்தில் ஷாக்? தலையைச் சுற்றுகிற....தே....

நாராயணனை யாரோ தாங்கிக் கொண்டார்கள். கனவுலகத்தில் போல் சொற்கள் கேட்டன.

''...பெரிய திருட்டுப் பயல் சார், நேத்திலேயிருந்து கவனிச்சுக்கிட்டே இருக்கேன். ஒருத்தர் கிட்டப் பேசறதில்லே!... அங்கே— இங்கே நிற்கிறதும், போறவங்க — வரவங்களைப் பார்க்கறதுமா இருந்தான்! பெரிய மனுஷன் கணக்கா டிரஸ் வேறே!... இப்ப என்னடான்னா, மெயின் ஸ்விச்சையே அணைக்கப் போறான்.... நான் இந்த ஆள் மேலே கவனமாயிருந்துக்கிட்டிருந்ததாலே கப்புனு புடுச்சிக்கிட்டேன். இவன் கூட்டாளியும் இங்கேதான் இருப்பான் சார்...''

'நம்ப நாராயணன்னா!...' என்று ஒரு குரல் கேட்டது.

''அய்யாமுத்து, இவர் நம்ம வீட்டு மனுஷர்டா! என்ன காரியம் செய்துட்டே?... த்சொ, த்சொ...''

''அப்போ, ...இவர் திரு...டன் இல்லையா?''

நாராயணன் மெல்லக் கண்ணைத் திறந்து அய்யாமுத்துவைப் பார்க்க விரும்பினான். கண்களில் நீர் பொங்க நின்ற பவானிதான் முதன் முதலில் தென்பட்டாள்.

நாராயணன் மீண்டும் மூர்ச்சையானான்!

# தாங்க முடியாத நோவா?



ஸால்ஜான் தலைநோவின் தாக்குதலைத் தடுக்கிறது.
பல்வலி, உடல்நோவு, ஃபுளு, தசைவலி
ஆகியவற்றிலிருந்து நிவாரணமளிக்கிறது.

EP-SS-19

பலநிறங்கொண்ட

SS

# ஸால்ஜான்

நோவுகளிலிருந்து துரிதமான
நிச்சயமான, அபாயமில்லாத
நிவாரணம் அளிக்கிறது.



கே: ஸால்ஜான் பல நிறங் கொண்டதாகத் தயாரிக்கப்படுவது ஏன்?
ப: ஒரு தலைசிறந்த நோவு நிவாரணியை நீங்கள் சுலபமாகக் கண்டு கொள்வதற்காகத்தான்!

ஒரு ஸ்மித்,
ஸ்டானிஸ்டரீட் தயாரிப்பு

# பத்மா இன்று பள்ளிக்கூடம் போகிறாள்!

இந்திரா பார்த்தசாரதி

**ப**த்மா அன்று வெகு சீக்கிரம் எழுந்து விட்டாள். இருட்டுக்குப் பவுடர் பூசினமாதிரி அப்பொழுது தான் ஆங்காங்கே திட்டுத் திட்டாக வெளிச்சம்.

பத்மா மனசில் குதூகலம். அன்று அவள் பள்ளிக்கூடம் போகப் போகிறாள். இரண்டு நாட்களுக்கு முன்பு அவளுடைய அப்பா அவளைப் பள்ளிக்கூடத்துக்கு அழைத்துக் கொண்டு போய்ச் சேர்த்து விட்டார். பள்ளிக்கூடப் பஸ் வர ஆரம்பித்ததும் வரலாமென்று சொல்லி விட்டார் தலைமை ஆசிரியர். இன்று பள்ளிக்கூடப் பஸ் வரப் போகிறது.

போன வருஷம் அவள் அக்கா பானு பள்ளிக்கூடம் போனாள். மாடி பஸ். சிவப்பு நிறம். சின்னச் சின்னக் குழந்தைகள் அதற்குள் உட்கார்ந்து கொண்டு அவளை எட்டிப் பார்த்தன. பானுவைப் பள்ளிக்கூட பஸ்ஸில் ஏற்றி அனுப்ப அவளும் வேலைக்காரனுடன் போவது வழக்கம். இன்று அவளே அந்த அழகான பஸ்ஸில் போகப் போகிறாள். தான் யாரை எட்டிப் பார்ப்பது? — வேலைக்காரனைத்தான் பார்க்க வேண்டும். பத்மாவுக்கு ஒரே சந்தோஷம். பரத் — வேலைக்காரப் பையனுக்கு — பத்து வயசிருக்கும். அவன் ஏன் பள்ளிக்கூடம் போவதில்லை? — இந்த



எண்ணம் தோன்றியதும் அவளுக்குப் பரத்திடம் ஓர் அநுதாபம் ஏற்பட்டது. பாவம் பரத் — தான் மாடிப் பஸ்ஸில் இருந்து கொண்டு 'டாடா' சொல்லும்போது அதைத் திருப்பிச் சொல்வதைத் தவிர அவனுக்கு வேறு வழியில்லை!

கட்டிலிருந்து கீழே இறங்கிய பத்மா அம்மாவைப் பார்த்தாள். அவளுக்குக் கோபம் கோபமாக வந்தது. இன்று அவள் பள்ளிக்கூடம் போகிறாள். அதைப் பற்றிக் கவலைப் படாமல் என்றும் போல் அம்மா இன்னும் தூங்கிக்கொண்டிருக்கிறாள்.

அப்பாவின் மேல் காலைப் போட்டுக் கொண்டு பானு இன்னொரு கட்டிலில் தூங்கிக் கொண்டிருந்



தாள். அப்பாவின் குறட்டை இலேசாகக் கேட்டது.

பத்மா ஜன்னலருகே சென்றாள். 'டைனிங் டேபிள்' நாற்காலியை இழுத்துப் போட்டு, அதன் மீது ஏறி ஜன்னலருகே உட்கார்ந்தாள். எதிர்த்த வீட்டில் நாய்க்குட்டி ஜானி புல் தரையில் புரண்டு விளையாடிக் கொண்டிருந்தது. பேப்பர்க்காரன் அதன் முகத்தில் பேப்பரை வீசி எறிந்து விட்டுப் போனான். அது கோபத்துடன் எழுந்து கீச்சுக் குரலில் குரைத்தது. ''வள்...வள்...''

''''வள்...வள்...'' அவள் அதன் குரலை எதிரொலித்தாள்.

ஜானி தன் வீட்டிலிருந்து மாடி ஜன்னலில் உட்கார்ந்திருந்த அவளை நிமிர்ந்து பார்த்தது.

''ஜானி... நான் இன்னிக்கு ஸ்கூலுக்குப் போகப் போகிறேன்...'' என்றாள் பத்மா.

ஜானி குரைத்தது. தான் பள்ளிக்கூடம் போவது அதற்குப் பிடிக்கவில்லையோ?— அல்லது ஒருவேளை அதற்குப் புரியவில்லையோ?

பத்மா கீழே இறங்கினாள். உள்ளே போய்த் தன்னுடைய புதுப் பை, சிலேட், புஸ்தகம் எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு வந்து ஜானி எதிரே ஆட்டிக் காண்பித்தாள்.

ஜானி பதிலுக்குத் தன் குட்டையான வாலை ஆட்டியது. பிறகு புல்தரையில் வந்து உட்கார்ந்து குருவிகளைப் பிடிக்க ஓடத் தொடங்கி விட்டது.

மற்றொரு நாற்காலி இழுக்கப்படும் சத்தம் கேட்டது. பத்மா திரும்பிப் பார்த்தாள். பானு நாற்காலியின் மீது ஏறினாள். அவளும் ஜன்னல் மீது ஏறி உட்கார்ந்தாள்.

''அம்மா புது சிலேட்டை ஜானிக்கு ஆட்டிக் காண்பிக்கிறு, பத்மா...'' என்றாள் பானு. அவள் தனக்கும் புது சிலேட் வேண்டுமென்று அடம் பிடித்தாள். அம்மா மறுத்து விட்டாள்.

''போடி, பொறாமைக்காரி'' என்றாள் பத்மா.

''ஐய, எனக்கென்ன பொறாமை!...''



''ஏண்டி, அவகிட்ட வம்புக்குப் போறே?''
''எனக்கும் புது சிலேட் வேணும்...''
வம்புக்குப் போக வேண்டிய காரணத்தை விளக்கினள் பானு.
''கிடையாதுன்னு கிடையாதுதான்...'' அம்மா அழுத்தம் திருத்தமாகச் சொன்னுள்.
''அப்படின்னு இன்னிக்கு நான் பள்ளிக் கூடம் போக மாட்டேன்.''
பத்மா பானுவைப் பரிதாபமாகப் பார்த்தாள். தான் தனியாகத்தான் போய்விட்டு வர வேண்டுமோ?...
''இன்னிக்கு வரமாட்டியாடி?...''
''ஊஹூம்...'' பானு பலமாகத் தலையை ஆட்டினள். பத்மா பயப்படுகிறுள் என்று தெரிந்ததும் அவள் பிடிவாதம் அதிகரித்தது.
''உனக்குத் தனியாகப் போகப் பயமோடி?'' என்று கேட்டாள் அம்மா.
''இல்லே... தனியாப் போவேன்...'' என்ருள் பத்மா. அவளுக்கு இது ஒரு கௌரவப் பிரச்னே.
பானுவும் பின்தொடர்ந்தாள்.
''பள்ளிக்கூடத்திலே சௌக்கிதார்கிட்டே ஓர் அல்சேஷியன் நாய் இருக்கு...எல்லாரையும் கடிக்கும்'' என்ருள் பானு. 'பேஸ்ட்' அவள் வாயில் வழிந்தது.
''அந்த நாய் ஒண்ணும் கடிக்காது. ரொம்பச் சாதுன்னு கீதா சொல்லியிருக்கா'' என்ருள் பத்மா.
''புதுசா வரவாளேக் கடிக்கும்...''
பத்மாவுக்குக் கொஞ்சம் பயம் ஏற்படத் தொடங்கியது.
''நீயும் வாயேண்டி பள்ளிக்கூடம்'' என்ருள் பத்மா. ஆபத்துக்குத் தோஷமில்லே. கொஞ்சம் பணிந்து போகலாம்.
''உன் புது சிலேட்டைத் தரயா?''
பத்மா லஞ்சம் கொடுக்கத் தயாராக இல்லே.
''நீ வர வேணும் போ...''
அம்மா பத்மாவுக்குத் தலே வாரும்போது பானுவைக் கேட்டாள்: ''நீ 'ஸ்கூலுக்குக் கிளம்பலியாடி?...''
பானு சிணுங்கத் தொடங்கினள். ''எனக்குத் தலேயை வலிக்கிறது...''
''இத்தனே நாழி சண்டை போட்டே? இப்போ தலேயை வலிக்கிறதா? கிளம்புமே பள்ளிக்கூடம்...''
பானு கட்டிலில் போய்ப் படுத்துக் கொண்டாள்.
''சரி, போகலேன்னு விடு... வற்புறுத்தினு, பள்ளிக்கூடத்துப் பேரிலேயே அவளுக்கு ஒரு வெறுப்பு வந்துவிடும்...'' என்ருர் அப்பா 'ஷேவ்' செய்து கொண்டே.
''நீங்களும் உங்க பைத்தியக்கார சைக்காலஜியும்...'' என்று அலுத்துக் கொண்டாள் அம்மா.
பத்மா சாப்பிட்டு முடித்தவுடன் கையில் பையை எடுத்துக் கொண்டு பள்ளிக்கூடம் புறப்பட்டாள்.
''பையை என்னிடம் கொடு'' என்ருன் பரத்.
பத்மா மறுத்து விட்டாள். தன் பொறுப்பைத் தான்தானே சுமக்க வேண்டும்? இது தானே பெரியவளாகி விட்டதற்கு அடையாளமாகும்?

பள்ளிக்கூட பஸ் மெயின் ரோட்டில் வந்து நிற்பது வழக்கம். ஒரு பெரிய மைதானத்தைத் தாண்டி பஸ் வந்து நிற்கும் இடத்துக்குப் போக வேண்டும்.
மெயின் ரோட்டை அடைந்ததும் ஒரு மரத்தடியில் போய் நின்ருள் பத்மா. பஸ் வந்து நிற்கும் இடம் இதுதான்.
பஸ் வந்தது. அதில் ஏறி உட்கார்ந்து பரத்துக்கு 'டாடா' சொன்னதும் பத்மாவுக்கு வாழ்க்கையின் மனோரதம் நிறைவேறியது.
பள்ளிக்கூட வாசலில் பானு சொன்னது போல் அந்தப் பெரிய நாய் நின்று கொண்டிருந்தது. பத்மாவுக்கு முன் இறங்கிச் சிறு பெண்கள் அந்த நாயைத் தடவிக் கொடுத்தவாறு உள்ளே சென்ருர்கள். பத்மா பயத்தை வெளியே காண்பிக்காமல் சகஜமான சுபாவத்துடன் அந்த நாயைத் தாண்டிச் செல்ல முற்பட்டாள். ஒரு புது வாசனேயை மோப்பம் பிடித்த அந்த நாய் தலேயை நிமிர்த்தி அவளேப் பார்த்தது. சூரிய வெளிச்சத்தில் மின்னிய அப்பார்வையின் ஒளி அவள் உடம்பு முழுதும் பயக் கதிர்களேப் பாய்ச்சியது. அவள் நடுங்கிக் கொண்டே உள்ளே ஓடினள்.
ஏற்பட்ட உணர்ச்சி இறுக்கத்தை அழுது தான் தளர்த்திக் கொள்ள வேண்டும். அவள் அழத் தொடங்கி விட்டாள்.
''ஏன் பாப்பா அழறே?'' என்று கேட்டுக் கொண்டே அவள் கையைப் பற்றினள் ஒரு பெரிய வகுப்பு மாணவி.
''இன்னிக்குத்தான் பள்ளிக்கூடம் வராப் போலிருக்கு...'' என்ருள் இன்னொரு பெண்.
பத்மாவுக்கு அவமானமாக இருந்தது. பள்ளிக்கூடம் வந்ததனுல் அவள் அழவில்லே. பானு இல்லாமல் பள்ளிக்கூடம் தான் தனியாக உற்சாகத்தோடு புறப்பட்டு வந்திருக்கிறேம் என்பதை எப்படி இந்தப் பெண்களே நம்பச் செய்வது? — அவர்களுக்கு அவள் அழுகைதான் வெளிப்படையாகத் தெரியும். நாயைக் கண்டு பயந்தேன் என்று சொல்லவும் அவளுக்குக் கூச்சமாக இருந்தது.
பத்மா ஒன்றும் பேசாமல் மேலே நடந்தாள்.
''எல்லோரும் 'ப்ரேய'ருக்கு மைதானத்துக்குப் போங்கள்'' என்று அதட்டிக் கொண்டே ஓர் ஆசிரியை வந்தாள். அவளேப் பார்த்தால் பயமாக இருந்தது. பெரிய உடம்பு, குரல் கட்டையாக ஒலித்தது.
நல்ல வெய்யில். வகுப்புவாரியாக எல்லா மாணவ மாணவிகளும் வரிசையாக நின்றனர்.
தலேமை ஆசிரியர் வந்ததும் நிசப்தம் நிலவியது. அவர் கையில் ஒரு பிரம்பு இருந்தது. இரண்டு கன்னங்களும் ஆப்பிளே அடக்கி வைத்துக் கொண்டிருப்பவை போல உப்பியிருந்தன. அப்பாவின் சிநேகிதர் மேஜர் ராஜூ மாமாவைப் போல் பெரிய மீசை வைத்திருந்தார் தலேமை ஆசிரியர்.
இரண்டு பெண்கள் பாடி முடித்தவுடன், தலேமை ஆசிரியர் ஆங்கிலத்தில் பேச ஆரம்பித்தார். அவருக்குத் தமிழ் தெரியாது என்று பானு சொல்லி யிருக்கிறுள் பத்மாவிடம்.
வகுப்பில் போய் உட்கார்ந்ததும் பத்மாவுக்கு ஒரே சோர்வாக இருந்தது. சே!....

## இருமலா?

# க்ளைகோடின்

## சாப்பிட்டதும் போய்விட்டதே!

சற்று முன்புதான் அவள் இருமலால் தவித்துக் கொண்டிருந்தாள் என்றால் நம்புவீர்களா? பிறகு க்ளைகோடின் சாப்பிட்டாள். க்ளைகோடின் அவள் இருமலை வெகுசீக்கிரம் பூரணமாக நிறுத்திவிட்டது.

**பூரண இருமல் கட்டுப்பாட்டுக்கு க்ளைகோடினுக்கு இணை எதுவுமில்லை!**



அவளுடைய கடுமையான இருமலை க்ளைகோடின் வெகுசீக்கிரம், பரிபூரணமாக நிறுத்தியது.

- **மூளையில்**—இருமல் கேந்திரத்தைக் கட்டுப்படுத்துகிறது
- **தொண்டையில்**—சளி அடைப்பை அகற்றி எரிச்சலைச் சமனப்படுத்துகிறது
- **மார்பில்**—இறுகிய தசைநார்களுக்கு இதமளித்து சுலபமாக சுவாசிக்க உதவுகிறது
- **நுரையீரல்களில்**—அடைத்துக் கொண்டிருக்கும் கோழையைத் தளர்த்தி சளியை வெளியேற்றுகிறது



Alembic

# க்ளைகோடின்

**டெர்ப் வசாகா**

இருமல்களுக்கு, மிக அதிகமாக விற்பனையாகும் நம்பகமான வீட்டு நிவாரணி

everest/659c/ACW/tm

எவ்வளவு தொந்தரவுகள்! — போன வருஷம் எப்படித்தான் பானு தனியாகப் பள்ளிக் கூடம் வந்தாளோ?

அவளுக்கு 'டீச்சர்' இல்லே; ஒரு 'சார்' தான் வந்தார். அவர் முகம் கடுமையாக இருந்தது. எந்தெந்தப் பெஞ்சில் யார் யார் உட்கார வேண்டுமென்று அவர் உட்கார வைத்தார்.

பத்மா பக்கத்தில் உட்கார்ந்த பையன் நல்ல வளர்த்தி.

''உன் பேரென்ன?'' என்று அவன் கேட்டான். அவன் பேசும்போது எச்சில் வழிந்தது. இது பத்மாவுக்குப் பிடிக்கவில்லே. இவ்வளவு பெரிய பையன் ஏன் முதல் வகுப்பில் படிக்கிறன்?—

''பதில் சொல்ல மாட்டே?'' என்று அவன் அவளேக் கிள்ளினன்.

வலி பொறுக்க மாட்டாமல் அவள் 'வீல்' என்று கத்தினள்.

'சார்' அவள் பக்கம் திரும்பினர். ''ஏன் கத்தறே?...''

பத்மா முதலில் பதில் சொல்வதாக இல்லே. அந்த 'சாரை'க் கண்டால் அவளுக்குப் பிடிக்கவில்லே. ஆனல் அவர் மறுபடியும் அதட்டிக் கேட்டவுடன் சொன்னுள்.

''இந்தப் பையன் கிள்ளிட்டான் சார்.'' அவள் அவன் கிள்ளின இடத்தைக் காண்பித்தாள். குங்குமமாகச் சிவந்திருந்தது. நகக் குறி வேறு.

''கிள்ளினியாடா?'' என்று கோபத்துடன் கேட்டார் 'சார்.'

அந்தப் பையன் எழுந்து நின்ருன். பதில் சொல்லவில்லே. ஆனல், பெரிதாகச் சிரிக்கத் தொடங்கினன்.

''ஏண்டா சிரிக்கறே?...'' என்று கேட்டார் சார்.

''அப்படித்தான் சிரிப்பேன்...''

அவ்வளவுதான். 'சார்' அவனே அடிக்கத் தொடங்கினர். கண் மண் தெரியாமல் அடித்து விட்டார்.

பத்மாவுக்கு அந்தப் பையனேப் பார்த்த போது பரிதாபமாக இருந்தது. அவன் கேவிக் கேவி அழுதான். அவ்வளவு பெரிய பையன் அவளேவிட மிகச் சிறியவர்களிடையே அப்படி வாய் விட்டு அழுதது அவளே மிகவும் கஷ்டத்துக்குள்ளாக்கியது. அவனுக்குப் பதிலாகத் தான் அழலாமா என்று தோன்றியது.

சிறிது நேரம் கழித்து இன்னெரு 'சார்' வந்தார். அப்பொழுது அவள் வகுப்பு 'சார்' கையிலிருந்த ஏதோ புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தார்.

''பாடம் நடத்த இன்னும் ஆரம்பிக்கவில்லேயோ?'' என்ருர் அவர் புத்தகத்தைப் புரட்டிக் கொண்டே.

''பாடமாவது, மண்ணுங்கட்டியாவது... வருஷம் முழுதும் வாயைத் திறக்க மாட்டேன். பிரமோஷன் கொடுத்தாத்தான் பேச்சு.... பத்து வருஷமாவா எனக்கு ஒண்ணுங் கிளாசு?''

அப்படியானல், இந்த 'சார்' பாடம் நடத்த மாட்டாரா? தான் எதற்காகப் பள்ளிக்கூடம் வரவேண்டும்?




இப்படிச் சொல்லுவது யார்? அடுத்த பக்கம் பார்க்க.

'சார்' சொன்னபடியே செய்தார். ''சத்தம் போடாமே இருக்கணும்'' என்று சொல்லி விட்டு அந்த இன்னெரு 'சாரோ'டு புறப்பட்டுப் போனவர், போனவர்தான். 'லஞ்ச்' சுக்கு மணி அடிக்கும்வரை வரவேயில்லே.

'லஞ்ச்' முடிந்து கிளாசுக்குப் போனதும், 'சார்' வந்தார். போர்டில் 'அ, ஆ, இ, ஈ.' எழுதிப் போட்டார்.

''எங்கே எல்லோரும் இதைப் பார்த்து எழுதிக் கொண்டாங்கோ'' என்ருர் சார்.

பத்மாவுக்கு 'இ'யைக் கண்டாலே பிடிக்காது. வீட்டில் எவ்வளவோ தடவை அம்மா எழுதச் சொல்லிப் பார்த்தும் அந்த எழுத்தை அவளால் எழுத முடியவில்லே. தான் எழுதியிருப்பதைப் பார்த்தால் 'சார்' அடிப்பாரோ? காலேயில் அவர் அந்தப் பையனே அடித்தது அவள் நினேவுக்கு வந்தது.

'சார்' ஒவ்வொரு சிலேட்டாகப் பார்த்துக் கொண்டு வந்தார்.

பத்மா நடுங்கிக் கொண்டே உட்கார்ந்திருந்தாள். 'சார்' பத்மாவிடம் வந்தார்.

அவள் 'சிலேட்டை' அவரிடம் காட்டவில்லே.

''சிலேட்டைக் காண்பி'' என்ருர் 'சார்.'

பத்மாவுக்கு அழுகை வந்து விட்டது. 'சார்' சிலேட்டைப் பிடுங்கினர். அந்த வேகத்தில் சிலேட் கிழே விழுந்து உடைந்து விட்டது. சிலேட் உடையாமல் இருக்கும் போதே உடைந்திருக்கிறது' என்று காலேயில் பானு சொன்னுள். இப்பொழுது நிஜமாகவே சிலேட் உடைந்து விட்டது பானுவுக்குத் திருப்தியாக இருக்கலாம்; ஆனல் அம்மாவுக்கு என்ன பதில் சொல்வது?

''சிலேட்டைக் காட்டாமே அவ்வளவு என்ன வீம்பு உனக்கு?'' என்ருர் 'சார்.'

'சிலேட்' உடைந்ததும் பத்மாவின் கனவுகளெல்லாம் சிதறின. பள்ளிக்கூடம் வர அவள் எவ்வளவு உற்சாகத்துடன் இருந்தாள், எவ்வளவு சந்தோஷத்துடன் எதிர்த்தவீட்டு ஜானிக்குத் தன் 'சிலேட்டை'க் காண்பித்தாள்!

சிறிது நேரம் கழிந்ததும் 'சார்' மறுபடியும் ஏதோ புஸ்தகத்தில் ஆழ்ந்து விட்டார். ''போர்டிலே எழுதி யிருக்கிறதைப் பத்துப் பத்துத் தடவை எழுதுங்கோ'' என்ருர் 'சார்'. ஆனல் பத்மாவிடம் சிலேட் இல்லே,

உடைந்து விட்டது... என்ன செய்வதென்று அவனுக்குப் புரியவில்லை.

''என் சிலேட்டிலே எழுது'' என்றான் காலையில் அடி வாங்கிய பையன்.

''உனக்கு?''

''வேணும்...நான் எழுதினாலும் எழுதாட்டாலும் சார் பார்க்க மாட்டார்.''

அவன் சொன்னது வாஸ்தவம்தான். பத்மாவின் 'சிலேட்'டைப் பார்க்க வந்த 'சார்' அவன் சிலேட்டைப் பார்க்கவில்லை; அவன் எழுதவுமில்லை.

காலையில் தன்னால்தானே அவனுக்கு அடி என்ற நினைவு வந்ததும் பத்மாவுக்கு அவனிடம் பரிவு மிகுந்தது.




ஒரு குழாயின் பிரலாபம்!

''நான் உனக்கு எழுதித் தரட்டுமா?'' என்று கேட்டாள்.

''வேணும்... நான் செத்துப் போகப் போறேன்.''

பத்மாவுக்குத் தூக்கி வாரிப் போட்டது. இந்த வார்த்தையைச் சொன்னால் அம்மா வீட்டில் கொன்று போட்டு விடுவாள். இந்தப் பையன் சர்வ சாதாரணமாக இதைச் சொல்லுகிறான்!

''என்ன சொல்லறே நீ?'' என்று கேட்டாள் பத்மா. ஒருவேளை தான் சரியாக அவன் சொன்னதைக் கேட்கவில்லையோ என்னவோ!

''ஆத்துக்குப் போனா அடி, பள்ளிக்கூடம் வந்தா அடி... நான் செத்துப் போகப் போறேன்...''

ஒருவனால் நினைத்த சமயத்தில் செத்துப் போக முடியுமா என்று பத்மாவுக்குப் புரியவில்லை.

''எப்படிச் செத்துப் போவே?'' என்று கேட்டாள் பத்மா.

''இப்படி'' என்று சொல்லி விட்டுத் தன் கண்களை உருட்டி உருட்டி ஓரத்தில் செருகித் தலையை இரண்டு தடவை ஆட்டிவிட்டு, 'டெஸ்கில்' குனிந்து கொண்டான் அந்தப் பையன்.

நாக்கு வெளியே நீட்டியிருந்தது.

பத்மாவுக்குப் பயமாகப் போயிற்று.. தாத்தா இரண்டு வருஷங்களுக்கு முன்னால் இப்படித்தான் செத்துப் போனார். ஆனால் அவர் நாக்கு. வெளியே நீட்டியிருக்கவில்லை.

அந்தப் பையனின் கண்கள் பாதி திறந்திருந்தன. அசையவில்லை.

காலையில் 'சாரி'டம் நன்றாக அடி வாங்கி விட்டு மத்தியானம் இப்படியா செத்துப் போக வேண்டும்? அவன் அடி வாங்கினதற்குத் தான்தான் காரணம், அப்படியானால் அவன் செத்துப் போனதற்கும் தான்தான் காரணம்... முதல் நாள் பள்ளிக்கூடம் வந்த அன்றே அவள் ஒருவனைக் கொன்றுவிட்டாள். பூச்சியைப் பிடிப்பது பாவம் என்று பானுவைக் கண்டிப்பாள் அம்மா. ஆனால் பானு தேவலை! — தான் ஒரு பையனையே கொன்று விட்டோம்... பத்மா தேம்பித் தேம்பி அழுதாள்.

''யார் அழறது?'' என்றார் 'சார்'.

அவர் பத்மாவைக் கவனித்து விட்டார்.

''ஏன் அழறே?''

பத்மா பதில் சொல்லவில்லை. காலையிலிருந்தே அவள் கொஞ்சம் கொஞ்சமாக அடக்கி வைத்திருந்த உணர்ச்சிகள் திடீரென்று பொங்கின. 'பள்ளிக்கூடம்', 'சார்' என்ற புற நினைவு ஒன்றும் அவளுக்கு இல்லை. அழுகை ஒன்றே அவளுக்கு ஆதரவு தந்தது.

''ஏன் அழறே சொல்லேன், மறுபடியும் கிள்ளிட்டானா?'' என்றார் 'சார்.'

பத்மா விக்கி விக்கிச் சொன்னாள்: ''இந்தப் பையன் செத்துப் போயிட்டான் சார்...''

''என்னது?...:'' 'சார்' கையிலிருந்த புத்தகத்தை 'டபக்'கென்று மூடினார். மிக வேகமாகப் பத்மாவிடம் வந்தார்.

அந்தப் பையனருகில் வந்து சிறிது நேரம் நின்றார். அவன் உடம்பு அசையவேயில்லை.

''டேய்... பானு... டேய்...'' என்று கூப்பிட்டார். பாதி திறந்த கண்களில் சலனத்தையே காணோம். 'சார்' சுற்று முற்றும் 'கிளாசை'ப் பார்த்தார். ''காத்தாலே நான் இவனை அடிச்சேன்னு யாரும் சொல்லக் கூடாது'' என்றார் சார்.

அப்பொழுது அந்தப் பையன் திடீரென்று தலையைத் தூக்கி உட்கார்ந்தான். பலமாகச் சிரிக்கத் தொடங்கினான்.

''சார், பயந்துட்டேளான்னோ?—இனிமே அடிக்க மாட்டேளோ?''

'சார்' முகம் கோபத்தால் சிவந்தது. ''கல்லுளி மங்கண்டா நீ!''. இதற்கு மேல் அவரால் ஒன்றும் சொல்ல முடியவில்லை.

பத்மாவுக்கு அந்தப் பையன் பக்கத்தில் உட்காரப் பயமாக இருந்தது. முதலில் நிஜமாகவே செத்துப் போகவில்லை என்பது என்ன நிச்சயம்? இப்பொழுது பக்கத்தில் உட்கார்ந்திருப்பது பிசாசோ! இனிமேல் பள்ளிக்கூடமும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம்.... வீட்டில் சின்ன அறையில் உட்கார்ந்து சோபாவில் பொம்மைகளைப் பரப்பிக் கொண்டு விளையாடுவதுதான் சந்தோஷமான விஷயம். அம்மா எப்பொழுதும் அருகில் இருக்க வேண்டும். ஆயுசு முழுதும் குழந்தையாகவே இருந்து விட்டால் வீட்டை விட்டு வெளியே வந்து உலகத்தில் புகுந்து கஷ்டப்பட வேண்டாம்.... குழந்தையாக இருப்பதைக் காட்டிலும் ஞானியாக இருந்து விட்டால் இன்னும் நல்லது. பள்ளிக்கூடம் போக வேண்டாம்.

கண்களை மூடிக் கொண்டு உட்கார்ந்திருந்த பத்மாவைப் பார்த்ததும் அவள் தூங்குகிறாளென்று நினைத்தார் 'சார்'. ஆனால் அவள் இறைவனை வேண்டிக் கொண்டிருந்தாள்.

CTP-32 TAM

# இனாம்

## உங்களுக்குப் பிடித்தமான
## பினாகா டாப் டூத் பேஸ்ட்

### நீங்கள் விரும்பும்
## பினாகா டால்க்குடன்
### இனாம்




அந்த மெல்லிய, துல்லிய மணங்கமழ், மங்கல பினாகா டால்க்;
மேனியை தழுவிடத் தூண்டும். இதனுடன் நழுவிட முடியா
நல்ல வாய்ப்பாக இப்போது உங்களுக்கு பிடித்தமான பினாகா டாப்
டூத்பேஸ்ட் இனாமாக கிடைக்கிறது. திரளென மொய்க்குது கூட்டம்.
தேடிப் பெறுக இன்றே, சலுகையின் பலனை நன்றே.

தமிழ்நாடு. கேரளம், மகாராஷ்டிரம் மற்றும் மேற்கு வங்காளம்
ஆகிய மாநிலங்களுக்கு மட்டுமே, ஸ்டாக் உள்ளவரை இந்த சலுகை.

C I B A Cosmetics




# வண்ணக் கோலம்

'எண்ணங்களுக்கு வடிவம் கொடுக்கும் பொழுது அவை தங்களுக்குரிய இனிப்பை இழந்து விடுகின்றன'-என்னுடைய நண்பர்.

'அல்ல. எண்ணங்கள் வடிவம் பெறும் பொழுது அவற்றில் முன்பு இல்லாத ஒன்று — அதுதான் கலைத் தன்மை சேர்ந்து அவை இன்னும் மெருகு பெறுகின்றன' — நான்.

இது நெடு நாட்களுக்கு முன்பு நடந்த விவாதம். அப்பொழுது நான் உணரவில்லை. இப்பொழுது — உன்னைப் பற்றிய நினைவுகளில் மூழ்கி — அதை வடித்தெடுக்க முயலும்போது முயற்சியே தோற்றுப் போய் எழுதுகோலைக் கீழே வைக்கவும் மனமின்றிக் கையில் ஏந்தியும் பயனின்றித் திகைக்கும் போது — நன்றாக உணர்கிறேன்... நினைவுகளை நினைவுகளாகவே விட்டு வைப்பதுதான் நல்லது என.

நினைவுகளை வடிக்க முடியாமல்—நினைத்த ராகத்தை மீட்ட முடியாமல் — திணறுவது— அதில் ஒரு சுகம் உண்டு. அநுபவித்தால்தான் தெரியும் !

நீ என்னிடம் கேட்டாய் — 'என்னைப் பற்றி எழுதுவீர்களா ? நீங்கள் கவிஞராயிற்றே. என்னைப் பற்றி எழுதுவீர்களா ?'

நான் என்ன சொன்னேன்? நினைவிருக்கிறதா ? 'நிலவைப் பிடிக்கிற முயற்சியிலே தோற்றுப் போய் ஓடுகிற கடலைப் போல் உன்னை எழுத்திலே சிறைப் பிடிக்க முயன்று நான் தோற்று எழுப்பும் ஒலிதான் இலக்கியமாகப் பரிணமிக்கும்.'

நீ சொன்னாய்: 'மழுப்புகிறீர்கள். ஆமாம், உங்கள் பொன்னான நேரத்தை இந்தப் பேதையைப் பற்றி எழுதுவதில் வீணாக்குவீர்களா ? வான வில்லின் வர்ணத்தை நகப் பூச்சுக்கு உபயோகிப்பார்களா?'

நான் இடைமறித்துக் கைகொட்டினேன். பின், 'பேஷ், நீயே கவியாகி விட்டாயே' என்றேன்.

உனக்கு வெட்கத்தால் முகம் சிவந்து விட்டது. நான் தொடர்ந்தேன்: 'ஊஹூம்! வானவில்லின் வர்ணத்தை எடுத்து நகப் பூச்சுக்குப் பயன்படுத்த மாட்டார்கள். ஆனால் வான வில்லின் வர்ணத்தை எடுத்து இதோ உன் கன்னங்களோடு ஒப்பிட்டுப் பார்ப்பார்கள்.'

நீ கைகளால் முகத்தைப் புதைத்துக் கொண்டாய். மலர்களால் தடாகம் மறைபடுவதில்லை.

இலைகளை விலக்கிக் கொண்டு காற்று வீசுவது போல் விரல்களின் இடுக்கு வழியே உன் கண்கள் என்னைப் பார்த்துக் கொண்டிருந்தன. அந்த இரு நட்சத்திரங்களின் ஒளியிலே மூழ்கி எழுந்த லாகிரியில் நான் மெல்ல இசைத்தேன்: 'மறைத்ததனால் அழகு மறைந்ததில்லை.'

நீ வெடுக்கென்று கூறினாய்: 'பாரதியார் இருந்தால் மிக மிக வருந்துவார்.'

'ஏனாம்?' — நான் உன் வாயைக் கிண்டினேன்.

'தம்முடைய பாடலைத் துஷ்பிரயோகம் செய்வதால்....'

'பூமியிலே விழுந்துவிட்ட மலர்கள் செடிக்குச் சொந்தமில்லை. வாயிலிருந்து உதிர்ந்து விட்டால் பாடலும் கவிஞனுக்கு உரிமையல்ல.' — நான்.

'நன்றாக இருக்கிறதே தர்க்கம். வானிலிருந்து விழுந்து விட்டால் நட்சத்திரங்கள்.'

நான் குறுக்கிட்டேன். 'வானுக்குச் சொந்தமில்லை. அது சரி, நான் நட்சத்திரமானால் நீ என்ன ஆவாய் ?' — நான்.




'நட்சத்திரமாகும் தகுதி எனக்கு இல்லை. எனக்கு உருவம் கிடையாது. நான் உங்களைச் சுற்றிக் காற்றாகச் சுழல்வேன். ஓயாமல் உங்களைத் தழுவியபடி இருப்பேன். சுடர் விடும் உங்கள் ஒளிக்கு வேறு யாரும் பங்குக்கு வந்து விடாதபடி நான் உங்களையே சுற்றிச் சுற்றி வருவேன்.'

'பெரிய பொறுமைக்காரியாக இருப்பாய் போலிருக்கிறதே. நிலவு எல்லோருக்குந் தான் பொது.'

'கடல் நினைக்கலாம், குமுதம் எண்ண லாம், மேகம் கருதலாம், நிலவு தனக்குச் சொந்தம் தனக்கேதான் சொந்தம் என்று. ஆனால் 'இரவு' ஒன்றினால்தான் அதன் மீது உரிமை கொண்டாட முடியும்.'

'ஜீவன் எழுப்புகின்ற இசையை விரல்கள் வடிக்க முடியாமல் திண்டாடுவது போல் உன் கவிதை வெள்ளத்தில் என் அறிவு நிலை கொள்ளவில்லை.'

'போதும், முகஸ்துதி. ஜீவன் ததும்பும் பேச்சின்முன் எழுத்துக்கள் தம் ஒளி குன்றிக் கூர்மை இழப்பது போல் உங்கள் முன் வாதாட எனக்குத் தெரியாது. நிராயுத பாணியான என்னுடன் போரிடுவது உங்களுக்கு அழகல்ல.... உம்... அதிருக்கட்டும். என்னைப்பற்றி எழுதுவீர்களா மாட்டீர்களா?'

கலை பொருந்திய உன் முகத்தைக் கையில் ஏந்திக் கொண்டு நான் கூறினேன்:

'தேன் மழையை சொரிகிற இதழடைக்குள் விரல் விட்டுத் தேனைப் பிழிந்து தாருங்கள் என்று அடம் பிடிக்கிறாய் நீ. நான் என்ன செய்ய? உன்னைப் பற்றி எழுதுகிறேன். எழுத ஆசைதான். ஆனால் என்னால் முடியுமா என்பது ஐயம். நவரஸங்களிலே தோய்த் தெடுத்த சொல் முத்துக்களை வைர ஏடு களிலே தெறுவேன். ஆனால் அவற்றுக்கு உயிரூட்ட என்னால் இயலுமா என்பது எனக் குத் தெரியாது. அன்பே! உன்னைக் குறித்து ஓராயிரம் ஏடுகள் நிரப்பினாலும் முன்னுரை முடிந்திராது —'

நீ அகங் குளிர்ந்து விட்டாய். கண்களிலே உவகை ஊற, உதடுகளில் உணர்ச்சி பொங்கக் கன்னக்கில் நாணத்தின் தழும்பு விளங்க, நீ சொன்னாய்—'ஆயிரம் ஏடுகள் வேண்டாம். அழகான இரு வரிகள் போதும். அவற்றிலே உங்கள் நினைவுகளின் ரஸத்தை வடியுங்கள். அப்பொழுது ஜீவன் தானே பிறக்கும்.'

'என் இதயம் பரந்தது. அதை இரண்டு வரிகளாக் குறுக்குகிறாய். உனக்காக நான் வாமனன் ஆக வேண்டும்.'

நான் கற்பனை செய்யலானேன். 'ஏன் இப்படிக் கூறினாலோ? இரண்டு வரிகள்: ''அவன் தீபம். அவள் இருள். தீப ஒளியின் போதையிலே இருள் தன்னைப் பறி கொடுத்து விடுவதுபோல் அவள் அவன் மயமானாள்.''

'எப்படிடி?'

'கற்பனை நன்றாக இருக்கிறது. அதாவது நிஜமில்லை என்று பொருள். நான் தீபமா?... உம்... அப்படியானால் என்னை அணைத்தால் தான் நீங்கள் சுதந்திரமாக வாழ முடியும்.'

நான் கொஞ்சம் திடுக்கிட்டேன். சட் டெனச் சமாளித்துக் கொண்டேன். 'ஆமாம்! உன்னை அணைத்தால்தான் எனக்குச் சுதந்திர வாழ்வு — சுகம் — சகலமும்.'

நீ புரிந்து கொண்டாய். 'ஆமாம்... உங்களுக்குக் குறும்புதான். அணைத்தால் என்று நான் சொன்னது அவித்தால் என்ற பொருளி லாக்கும்... உம்க்கும்...' நீ சிணுங்கினாய்.

நான் சொன்னேன். 'ஆமாம்... சுடரை அணைத்தால் — அதாவது அவித்தால் இருட்டு ஓடியே வந்து சுடரைத் தேடுகிறது. தேடி அழுகிறது. கதறுகிறது.... இது ஒன்றும் சுடருக்குத் தெரியாது.... அது உயரே எங்கோ இருந்துகொண்டு இருட்டைப் பார்த் துச் சிரிக்கிறது.' — நம் இருவர் கண்ணிலுமே பொல பொல வென்று நீர் கசிந்தது. 'ஏன் அழுதாய்?' என்றேன் நான். 'நீங்கள் ஏன்?' என்றாய் நீ.

அன்று நீ உன்னைப் பற்றி எழுதச் சொன் னாய். நான் வேடிக்கையாக அப்படி எழுதவா, இப்படி எழுதவா என்றெல்லாம் கேட்டேன். அப்பொழுது அந்தக் கோரிக்கையை நான் நன்கு உணரவில்லை. அன்று, எண்ணத்தை வடிக்கும் போது மெருகு ஏறுகிறது என்ற கருத்தோடு இருந்தேன் நான். ஆனால் இன்று.... இதோ உன்னைப் பற்றிய நினைவு களை நான் ஒன்றுகூட்டுகையில் — காட்சி மலரில் ரஸத் தேன் உறிஞ்சும் வண்ணப் பூச்சி களை ஒன்றாய்ப் பிடித்து வைத்து வண்ணக் கோலஞ் சமைக்க முற்படுகையில்—அவைகள் உன்னைப் பற்றிய அந்த நினைவுகள் — கலைத்து விட்ட கூட்டிலிருந்து தேனீக்கள் பறப்பது போலச் செல்லுகின்றனவே. இந்த நினைவு களும் கொட்டுகின்றன, தேனீயைப் போல். ஆனால் இவற்றின் ஸ்பரிசத்திலே இன்பம் இருக்கிறது. அந்தப் போதையிலே என் மனம் சான் நண்பரின் சொற்களைத் தெளிவாக எதி ரொலிக்கிறது: எண்ணங்களுக்கு வடிவம் கொடுக்கும்பொழுது அவை தங்களுக்குரிய இனிப்பை இழந்து விடுகின்றன.

# மேலே இருப்பவன்

## ஆர். சூடாமணி

வெளியே கிளம்பினேன். எங்கே, எதற்கு என்றெல்லாம் எனக்கே தெரியாது. வீட்டுக்குள் உட்கார்ந்து அலுத்தது தெரியும். அடுத்த சில விநாடிகளில் என் கால்கள் வீதியில் நடந்து கொண்டிருந்தன. நான் அவற்றைத் தொடர்ந்து சென்றேன். அப்படி எவ்வித நோக்கமோ, ஏற்பாடோ இன்றிச் செயல்படுவதில் என்னுள் ஒரு விடுதலை உணர்ச்சி கிளர்ந்தது. எதையுமே ஓர் உத்தேசத்தோடு தான் செய்ய வேண்டுமா என்ன? யோசனையே இல்லாமல் ஒவ்வொரு நொடியையும், அதன் புதுமையின் அதிசயத்தோடு, அதிலுள்ள எதிர்பாரா உள்ளடக்கத்தோடு, அதன் மெருகு குன்றாமல் எதிர்கொண்டவாறே வாழ்வைக் கடத்திவிடுவதில்தான் எத்தகைய சுகம்! பச்சிளங் குழந்தையின் உதடுகளில் காரணமில்லாமலே திடீரென்று உறக்கத்தில் புன்னகை தோன்றுகிறதே, அதில் இது போன்ற சுகம்தான் ஏதோ இருக்க வேண்டும், இல்லையா?

இறைமையைப் பற்றி எத்தனை சிந்தனைகள்! இவைகளில் ஏதேனும் உண்மையா? ஒரு சக்தி இந்தப் பைத்தியக்கார உலகைப் படைத்ததென்றால் அந்தச் சக்தியும் ஒரு பைத்தியமாகத்தான் இருக்க வேண்டும். அதற்கு என்ன என்ன உயர்வான பெயர்



களும் சித்தாந்தங்களும் கற்பித்திருக்கிறனர் உலக மேதைகள்! தன்னைத் தானே ஏமாற்றிக் கொள்ளும் பரிதாபமா? அல்லது, தம் மேதாவிலாசத்தை வெளிச்சம் போட்டுக் கொள்ளும் பொருட்டு உயரத்தில் சிலம்ப வித்தை செய்யும் சாமர்த்தியமா? தத்துவ ஞானிகளின் கருத்துக்களைப் படிக்கும் போதெல்லாம் அவர்கள் அறிவு நுட்பத்தை வியக்கிறேன். அழகான, உயரிய, ஒரு கனவின் கதையைச் சொல்லும் திறனை ரசிக்கிறேன். யாருக்குத்தான் அழகிய கனவு காண விருப்பமில்லை? அவர்கள் கண்ட கனவின் எழிலில் புகுந்து கொண்டு நாமும் அது நம்முடைய கனவை நினைவுபடுத்தும் அளவுக்கு அதில் கலந்து போய் விடுகிறோம், அவ்வளவுதான். விழித்தெழுந்தால் ஏது மில்லை. எல்லாம் வெறும் லட்சியங்கள், 'தியரி'கள். உண்மை எது? யார் கண்டார்கள்?

தெருவில் நிழல் பதித்தவாறு நான் நடந்து கொண்டே இருந்தேன். கைக் கடிகாரம் மாலைப் பொழுது என்று கூறியது. இல்லை என்றது வெய்யில். நீடித்த பிற்பக லாய் நீண்டுவிட்ட வெய்யில்.

பாலத்தை நெருங்கிக் கொண்டிருந்த போதே கூவம் ஆறு தனக்குத் தானே கட்டியம் கூறிக் கொண்டது. மூக்கைக் குடலுக்குள் இழுத்து இரண்டையும் வெளியே புரட்டித் தள்ளும் துர்நாற்றம்.

''டேய் பழி, எங்கேடா ஆகாசத்தைப் பார்த்துண்டு நடக்கறே?''

நான் குரல் கேட்டுத் திரும்பினேன். என் தூரத்துச் சொந்தக்காரர் சாமா. ஒரு கையில் தோல் பையிலிருந்து எட்டிப் பார்க் கும் சில காகிதங்களும் மற்றொரு கையில் இரண்டு விரல்களால் தூக்கிப் பிடித்த வேட்டி நுனியுமாக அவசரமாய் நடந்து கொண்டிருந்தவர் என் பக்கம் திரும்பி வந்தார்.

நெருங்கிய சொந்தம் இல்லையே தவிர ஒரே ஊரில் இருந்ததால் சந்தித்துக் கொள் ளும் சந்தர்ப்பங்களினால் எங்களுடையது ஊட்டம் பெற்ற உறவு. வறுமையும் பெரிய குடும்பமும் தெய்வபக்தியுமாகக் கஷ்டப் படுகிறவர் என்பதாக எனக்கு அவரைப் பற்றி அபிப்பிராயம்.

'' நீங்க எங்கேயிருந்து ஸார் வர்றீங்க? கெயிட்டியா? காஸினோவா இல்லே வேறு ஏதாவது தியேட்டரா?'' என்றேன்.

''ஏண்டா! போஸ்டர்களை யெல்லாம் பார்த்தால் என் வயசுக்காரன் போகக்கூடிய படமாகவா எல்லாம் தெரியறது?'' என்று நரை முடியையும் முகத்துக் கோடுகளையும் எடுத்துக் காட்டும் வகையாய்ச் சிரித்தார் சாமா.

''ஏன், பார்த்தா என்ன? இப்பல்லாம் எந்தச் சினிமாவானாலும் இது சகஜம். இதுக்கு ஆட்சேபம்னா சினிமாவே பார்க்க முடியாது.''

''ஆமாண்டாப்பா ஆமாம். காலம் கெட்டுத்தான் போச்சு. மேலேயிருந்து ஒருத்தன் எல்லாத்தையும் சிரிச்சண்டே பார்த்துண்டிருக்கான்.''

'' உலகத்தின் நிலைமையைப் பார்த்தால், அந்த மேலேயிருக்கிறவனின் 'ஸென்ஸ் ஆஃப் ஹ்யூமர்' ரொம்பப் பயங்கரமாக இருக்கும் போல் தோன்றுகிறது, இல்லையா?''

'' அவனைச் சொல்ல நமக்கு என்னடா தெரியும்? நமக்குக் கஷ்டம் நிறைய அப்ப டின்னு படுகிறதெல்லாம் நம் கணக்கு. நம் பார்வைக்கு அவ்வளவுதான் எட்டும். அவ னுக்கோ நன்மையுமில்லே, தீமையுமில்லே. அவனைப் பொறுத்த வரையில் எல்லாம் ஒரு விளையாட்டு.''

''இன்னிக்குக் கார்த்தாலே நான் என் கடைசித் தம்பியை அடிஅடின்னு அடிச்சு நொறுக்கிட்டேன். ஏன் தெரியுமா?''

சாமா என்னைக் கூர்ந்து பார்த்தார். ''இப்படிச் சம்பந்தமில்லாமல் ஒண்ணு சொன்னியானும் பின்னாலே நிமர்னு சம்பந் தம் வெடிச்சுண்டு வரும்னு அர்த்தம். அப் படித்தானே, என்டா? சொல்லு, ஏன் அடிச்சே?''

''ஒரு வண்ணாத்திப் பூச்சியைப் பிடிச்சு வச்சுண்டு இறக்கைகளை ரொம்பச் சுவாரசிய மாய்ப் பிச்சுப் போட்டுண்டிருந்தான். அதுக் காகத்தான்!''

''சரியான காரியம் செய்தே. சவு இரக்கம் இல்லாதவனுக்கு அடிச்சாத்தான் புரியும். குழந்தைகளே குரூரம்தான்.''

''குரூரத்தைப் பார்த்துண்டு என்னால் சும்மாயிருக்க முடியலே ஸார்! ஒரு வேளை நானும் மேலேயிருக்கிறவனாயிருந்தால் எனக் கும் அது ஒரு விளையாட்டாய்த் தோன்றி யிருக்குமோ என்னவோ....''

சாமா என்னை ஒரு தரம் ஏறிட்டுப் பார்த்து விட்டு மௌனமாய் நடந்தார். நானும் அவரோடு சேர்ந்து நடைபாதையில் நடக்க ஆரம்பித்தேன்.

''நீ நாஸ்திகனாகவே ஆயிண்டு வரே.''

''இல்லே, ஸார்! 'கடவுள் இல்லே'ன்னு அடிச்சுச்சொல்லவும் நிச்சயமான 'நாலெட்ஜ்' வேணும். ஆஸ்திகனைத்தவிர நாஸ்திகனும் உண்மையை நேருக்கு நேராய்ச் சந்திச்ச வன்தான். அந்த அளவுக்கு எனக்கு ஞானம் இருக்கிறதாய் நான் சொல்லிக்கலையே!''

''பின்னே?''

''எனக்கு எதுவுமே புரியலேங்கறேன். ஒரு நாணயமானவன். அவ்வளவுதான் இந்த விஷயத்தில் சொல்ல முடியும்கறேன்.''

''எத்தனையோ மேன்தகளின் தத்துவச் சிந்தனை.....''

''நானும் எல்லாம் படிச்சேன். என்ன தேடினேன்னு எனக்கே தெரியாது. ஆனால் அதைப் பார்த்திருந்தால் அடையாளம் கண்டுபிடிச்சிருப்பேன்னு மட்டும் தெரியும்.''

''உனக்கு உண்மை கிடைக்கலேங்கறே?''

''எதுவுமே என் அறிவை 'கன்வின்ஸ்' பண்ணலே.''

''ஆகாயத்திலே சூரியன் இருக்குன்னுகூட உன்னை யாராவது 'கன்வின்ஸ்' பண்ணணு மாக்கும்?''

'' என் கண்ணுக்கு அந்தச் சூரியன் தெரியலேன்னு என்னைப் பொறுத்தவரைக் கும் அது இல்லாத மாதிரிதானே?''



பம்பாய் உதவி போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஸ்ரீ K. Y. மகாதேவன் அவர்களது மருமான் **சௌ. என். ருக்மிணி** B. Sc. (Hons)க்கும், ஹிடெக்ஸ் எம்ப்ராய்டரி ஸ்தாபனத்தைச் சார்ந்த ஸ்ரீ **என். வி. ராஜன்.** B. Com (Hons) LL. B.க்கும் சமீபத்தில் பம்பாயில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது

வாழ்க மணமக்கள்!

சுற்றிலும் இரைச்சல் கேட்டது; நாங்கள் மௌனமாய் நடந்தோம்.

'' நீ எங்கேடா, போயிண்டிருந்தே, ப்ாவம், என் கூடவே வரயே ?''

'' உங்களுக்குப் பிடிக்கலேன்னு போயிட றேன். நான் என்னமோ எந்த உத்தேசத் தோடும் எங்கே போகணும்னும் கிளம்பலே. சும்மா கால் போன போக்கில் நடந்துண் டிருந்தேன்.''

சாமா சிரித்தார். ''அந்த விஷயத்திலே நீ உனக்குப் புரியாத அந்த ஆண்டவன் மாதிரி தான் இருக்கே! பிரபஞ்ச சிருஷ்டிக்கும் காரணமே கிடையாது....''

''அது பிரபஞ்சத்தைப் பார்த்தாலே தெரியறதே !'' என்று நானும் சிரித்தேன். '' நீங்க எங்கே போறுப்பலே? அல்லது கேட்டால் அபசகுனமோ!''

'' நான் போகிறதே ஜோஸியர்கிட்டத் தான். அப்புறம் சகுனமாவது, அபசகுன மாவது !''

''ஜோஸியர்கிட்டயா? என்ன விசேஷம்? பெண் கலியாணத்துக்கு ஜாதகம்.....''

''பெண்ணுக்கில்லே, என் ஜாதகத்தைத் தான் எடுத்துண்டு போறேன். என்னமோ கொஞ்ச நாட்களாய் எனக்குக் கஷ்டத்துக்கு மேலே கஷ்டமாய் வந்துண்டிருக்கு. முதல்லே உடம்புக்கு வந்தது. அப்புறம் வீட்டிலே மாமி படுத்துண்டு ஏகப்பட்ட வைத்தியச் செலவு. பாத்திரம் பண்டமெல்லாம் வைச்சுச் சாப்பிட்டாச்சு. இப்ப என்னடான்னு நம்ம பையன் வேலை பார்க்கிற கம்பெனியை மூடிடுவானோன்னு பயமாயிருக்கு. பெண் கல்யாணத்துக்குத் தலையாலே தண்ணி குடிக்கிறேன். ஏதும் நடக்கலே. இன்னும் ஒண்ணு ரெண்டா....''

அவர் நிறுத்திவிட்டு மூக்கைச் சிந்தி எறிந்தார். வெறும் ஜலதோஷம்தானா? எனக் குப் பரிதாபமா யிருந்தது.

''அதனாலே, இப்ப எனக்கு ஏழரை நாட் டானு. வேறேதாவது போறுத காலமோ இருக்கா, ஏதானும் பரிகாரம் செய்ய முடியுமா, பின்னாலே தசை மாறி நல்ல காலம் பிறக்கிறதா அப்படின்னு இதை யெல்லாம் என் ஜாதகத்தைக் காட்டிக் கேட்கலாம்னுதான்.... இங்கே பக்கத்திலே சோமனீசுவரன் பேட்டையில் எனக்குத் தெரிஞ்ச ஜோஸியர் ஒருத்தர் இருக்கார்....''

ஒருவாறு பிற்பகலின் காழத்தை தெரித்து விட்டு மாலைப் பொழுது கிளம்பி விட்டது.

''உனக்கு வேறேதும் ப்ரோகிராம் இல் லேன்னு என்னோடு அங்கேதான் வாயேன்.''

'' ஓகே; ஜோஸியர் பேச்சும் சுவாரசிய மாய்த்தானே இருக்கும் !''

ஹாரிஸ் ரோட்டின் தலையை மிதித்துக் கொண்டு இருவருமாக நடந்தோம்.

மற்ற சப்தங்களின் அலைகளை ஒதுக்கிக் கொண்டு முன்னேறி வரும் ஒரு நீச்சக் காரனைப் போல் தனியான ஓர் ஒலி எங்களை நோக்கி வந்தது.

எவ்வளவு பரிச்சயமான ஒலி ! எத்தனை முறை கேட்டாலும் எத்தகைய புதிரான ஒலி! பறையும் சங்கும் தப்பட்டமும் முழங்க, சோக முகக் கூட்டமும் புகை மணமும் நாலு தோள் ஏறிய நீட்டிய உடலு மாக ஊர்வலம் வந்து கொண்டிருந்தது.

''பார்த்தீர்களா, ஸார் ! இதுதான் விஷயம் '' என்றேன் அதைச் சுட்டிக்காட்டி.

'' எதைச் சொல்லறே?''

'' இதோ போறதே, கடைசி நிலை; இதைத்தான் சொல்றேன். வாழற வாழ்க்கை கஷ்டமோ சுகமோ எத்தனையோ உன்னத மாயும் எளிமையானதாயும் வெற்றிமய மாகவும் இருந்தாலும்கூட சரி, கடைசியில் முடியும் நிலை இதுதான். உலகம் பிறந்த நாளிலேயிருந்து யோசிச்சுப் பார்த்தால் மனுஷனுக்கு நிச்சயமாய்த் தெரிந்த ஒரே உண்மை 'ஒரு நாள் நாம் சாகப் போகி றோம்' என்கிறதுதான். வாழ்வைப் பற்றித் தெரிஞ்சுக்க முடியறதோ இல்லையோ முடிவு என்னன்னு தெரியும். அந்தப் பயம்தானே? ஏதேதோ பெரிய சிந்தனைகள், தத்துவங்கள், மதங்கள், 'தியரி'கள் அப்படின்னு மனுஷன் பதற்றமாய்த் தேடித் தேடி ஸ்தாபிச்சு வச்சுப் பக்கம் பக்கமாய்ப் பேசறதெல்லாம் கடைசியில் இந்த ஒரு மகத்தான பயத் துக்குப் பரிகாரமாயும் ஆறுதலாகவும் தானே ? உலகத்தில் மரணம் இல்லேன்னு வச்சுக்குங்க, அப்புறம் சித்தாந்தமோ தத்து வமோ எதுவும் அவசியமே இல்லை. பசி இல்லேன்னு இந்த உலகத்தைப் பத்திக் கவலை இல்லை. சாவு இல்லேன்னு மறு உலகத்தைப் பற்றிக் கவலையில்லை. அதுதானே உண்மை?''

சாமா எனக்குப் பதில் சொல்லவில்லை. தாண்டிப் போய்க் கொண்டிருந்த குனிந்த தலைக் கூட்டத்தில் ஒரு முகத்தை அவர் அடையாளம் கண்டு கொண்டு நின்று விட் டார்.

அந்தக் கண்களும் உயர்ந்தன. நட்பின் மரியாதைக்கு அவர் கணப் பொழுது பின் தங்கினார்.

'' நீங்களா, மிஸ்டர் பொன்னுசாமி ? உங்க குடும்பத்திலே யா...ரு?'' நண்பரை



ஆழி –

சீனாவில் 15-ஆம் நூற்றாண்டின் இறுதியிலேயே முதன் முதலாகச் சந்திரனுக்குப் போகும் 'ராக் கெட்' உருவாக்கப்பட்டது என்று கூறுகிறார்கள்! 'வான்ஹு' என்ற சீன அரசாங்க அதிகாரி ஒருவர் மூங்கில் கழிகளால் ஆன பல்லக்கு ஒன்றில் அமர்ந்துகொண்டு அடியிலிருந்த 47 வாணக் குழாய்களில் தீ வைக்கச் செய்தாராம். ஒரே சம யத்தில் 47 வாணங்களும் பற்றிக்கொண்டுப் பல்லக்கு மேலே கிளம்பியதாம். ஆனால், சந்தி ரனை நோக்கி மேலே கிளம்பிப் போன பல்லக்கு என்னவாயிற்று என்பது ஒருவருக்கும் தெரியாது!

நெருங்கிச் சென்று குரலை அடக்கிச் சாமா கேட்டார்.

அழுது கரகரத்த மெல்லொலியில் பதில் வந்தது. ''என் மாமாதான்.''

''யாரு! மிஸ்டர் சண்முகமா போய்ட்டார்? அடடா, நம்ப முடியலையே! நேத்துக்கூட அவரைப் பார்த்துப் பேசினேனே! புதுசாய்த் திட்டமிட்டிருக்கிற ஏதோ வியாபார ஏற்பாடுகளெல்லாம்கூடச் சொல்லிண்டிருந்தாரே!.... போய்ட்டாரா?''

''போனது மட்டுமில்லே, மிஸ்டர் சாமா! ரொம்ப.... ரொம்பக் கண்ணறாவியான சாவு....''

''ஏன், என்ன ஆச்சு?''

முதியவர் சண்முகம் அன்று காலை உலாவச் செல்கையில் வழக்கம் போல் ஆடொமாடிக் லெவல் கிராஸிங் குறுக்காகத் தண்டவாளங்களின் மேல் விழுந்தடித்துக் கொண்டு நடந்திருக்கிறார். எத்தனையோ முறைகள் மற்றவர்கள் தடுத்திருந்த ஒரு வழக்கம் அது. ''நெதம் போறேன் வரேன். என்ன ஆயிடப் போகுது?'' என்ற அலட்சியச் சிரிப்புத்தான் எப்போதும் பதில். இன்று காலை கணக்கு சற்றுப் பிசகி விட்டது. பின்னால் ரயில் அணுகிவிட்ட நிலை. கிழவர் சட்டென்று ஒதுங்கியதென்னவோ உண்மை. ஆனால் ரயில் ஓட்டத்தின் விசைக் காற்றில் முதிய உடல் பின்னுக்கு இழுக்கப்பட்டு விட்டது. ரயில் மோதிய வேகத்தில் அவர் அப்படியே அருகிலிருந்த ஒரு மின்சாரக் கம்பத்தில் தூக்கி எறியப்பட்டார். உடலில் பல எலும்புகள் உள்ளுக்குள் பொடிப் பொடியாகி விட்டிருப்பதாகப் பின்னால் பிரேதச் சோதனையின்போது மருத்துவர் கூறித் தெரிந்தது.

அந்தப் பயங்கரத்தின் கற்பனையில் சாமா சிறிது நேரம் ஊமையாகிப் போனார்.

''எலும்பெல்லாம் நொறுங்கியா போச்சு? அப்படின்னா.... விசையாய்த்தான் மோதியிருக்கணும்....''

''மோதிக்கிட்ட கம்பம் இருக்குது. பாருங்க? அது அப்படியே 'ட்விஸ்ட்' ஆயிடுச்சி.''

என் உடல் சிலிர்த்துச் சில்லிட்டுக் கொண்டது. சாமா அப்படியே திரும்பி வாந்தி எடுத்து விட்டார். பொன்னுசாமி ஊர்வலத்தோடு சேர்ந்து கண் மறைவாகியதெல்லாம் அவருக்குத் தெரியாது.

''அடடாடா, என்னய்யா நடுத்தெருவிலே அசிங்கம் பண்ணிக்கிட்டு.... நாலு பேர் நடக்கிற ரோடு....''

பல குரல்கள் ஒலித்தன. ஒரு வெற்றிலைக் கடைக்காரர் மட்டும், ''என்ன உடம்போ பாவம்!'' என்றவாறு சாமாவுக்குச் சோடா உடைத்துக் கொடுத்தார். சாமா அதை வாங்கி, பொங்கும் நுரை வழிய வழியப் பாதி அளவுக்குப் பருகி வாயைக் கொப்புளித்தார். குருதி வற்றிச் சாம்பி விட்டிருந்த முகத்தின் வேர்வையைத் துடைத்துக் கொண்டார். சோடாவின் வேகத்தில் ஏப்பம் விட்டவாறே சிசாவையும் விலையையும் கொடுத்தார்.

எங்கள் நடை தொடர்ந்தது.

''அப்...ப்பா! என்ன பயங்கரம்! கேட்கிற போதே தாங்கலே...'' அவர் வாயிலிருந்து ஒருவாறு சொற்கள் பிறந்தன.

''எனக்கு இப்போ திடீர்னு தோணறது, தெய்வம் இருக்குன்னு.''

அவர் பதில் சொல்லவில்லை. நானும் எதிர்பார்க்கவில்லை. நான்தான் பேசினேன்.

''இத்தனை அவல நிலையிலும் உலகத்திலே ஒரு கருணை இருக்கு. தனக்கு இப்படிப்பட்ட ஒரு கொடிய முடிவு வரப் போறதுன்னு தெரிஞ்சிருந்தா மிஸ்டர் சண்முகம் நிம்மதியா யிருந்திருப்பாரா? தான் ஏதோ சாகவதம்னு நினைச்சண்டு முந்தின நாள் கூட வருங்காலத் திட்டமெல்லாம் போட்டபடி சந்தோஷமாய்ப் பேசியிருப்பாரா? மரணம் ஒண்ணுதான் நிச்சயம் என்கிற நிலையிலே அந்த மரணம் எப்படி வரப் போகிறதுன்னும் மனுஷனுக்குத் தெரியாமல் வச்சு அவனுக்கும் நிம்மதியைக் கொடுக்கிற ஒரு கருணை இருக்கே, தெய்வம்னு ஒண்ணு இருந்தால் அதன் இருப்புக்கு இந்தக் கருணைதான் அத்தாட்சின்னு எனக்கு இப்போ தோணறது.''

அவர் என் பக்கம் திரும்பி நோக்கிக் கொண்டிருந்ததை அரைகுறையாகத்தான் கவனித்தேன். என் மனம் அதில் இல்லை. திடீரென்று என் நெஞ்சில் உலகத்தை நிறைத்துக் கொண்டு தோன்றி நின்ற இந்தப் புதிய ஆறுதலான தெய்விக உண்மையின் பூரிப்பில் தோய்ந்து நான் லயித்திருந்தேன்.

எங்கள் செருப்பொலியின் கவட்டில் இருவருமாய் நழுவிக் கொண்டிருந்தோம்.

''கோமளீசுவரன் பேட்டையின்கிட்டே வந்துவிட்டோம். எந்தத் தெரு ஸார், உங்க ஜோஸியர் வீடு?''

சாமா பதில் சொல்லாமல் தம் தோல் பையிலிருந்து ஜாதகக் காகிதத்தை வெளியே எடுத்து இரண்டாய்க் கிழித்து, நாலாய்க் கிழித்துக் கொஞ்சம் பலம் சேர்த்துக் கொண்டு பதினாறாய்க் கிழித்துப் பறக்கவிட்டார். கண்களெதிரே காற்றுக்குச் சிறு வெண் சிறகுகள் முளைத்துக் கீழே இறங்கின.

''என்ன ஸார் இது? எதுக்காக உங்கள் ஜாதகத்தை இப்படிக் கிழித்துப் போட்டு விட்டீர்கள்?''

''நான் ஜோஸியர் வீட்டுக்குப் போகலே. திரும்பி நட. என்னோடு வீட்டுக்கு வந்துட்டு வாயேன்?''

''ஏன் திடீர்னு தீர்மானம் மாறிப் போயிடுத்து?''

''நீ இதுவரையில் கடவுள் இருக்கோ இல்லையோன்னு சொல்லிண்டிருந்தவன்.... இப்போ திடீர்னு 'மறைச்சு வச்சிருக்கிறது தான் அவன் கருணை' அப்படின்னு விளக்கு ஏத்தின மாதிரி ஒரு பேச்சுப் பேசிட்டே. நானோ ஆஸ்திகன்னு பேரு. அந்தக் கருணையை நான் நம்ப வேணுமா? தூண்டித் துருவிப் பார்க்க நான் முயற்சி பண்ணலாமா?''

திரும்பி நடந்தோம். வந்த வழி எங்களை வியப்போடு பார்த்தது.

# □ வட்ட மேஜை

சென்ற 26-10-69 இதழ் 45ம் பக்கத்தில் வெளியான புதிருக்கு மற்றொரு விடை.



கோயமுத்தூர்
27-10-69 எம். எல். பி. தியாகராஜன்

நீங்கள் வெளியிட்ட புதிருக்கு இதோ வேறொரு விடை கண்டு பிடித்திருக்கிறேன்.



சென்னை-34
25-10-69 எஸ். ஆர். பிரேம்குமார்

காந்திஜி நூற்றாண்டு விழாவில் விற்பனையாகும் கதருக்கு அது நூலானாலும் பட்டானாலும் ரூபாய்க்கு 10 பைசாதான் கழிவு தரப்படுகிறது. கடந்த காலங்களில் 10 பைசாவுக்கு மேல் 20 பைசா வரையில் கமிஷன் அனுமதிக்கப்பட்டது. அண்ணல் நூற்றாண்டு விழாவில் அதற்கு அதிகமாயில்லாவிட்டாலும் அதே 20 பைசா கழிவு அளித்திருந்தாலும் ஏழை மக்களுக்கு ஒரு சிறந்த நிவாரணமாக இருக்கும். அத்துடன் கதர் விற்பனையும் அதிகரித்து நல்ல பலனையும் எதிர்பார்க்க வழியுண்டு.

நெமிலி,
24-10-69 ஜி. கே. வி. சுப்ரமணியம்.

*சென்ற 23-10-69 காலை ஐந்து மணிக்கு எங்கள் ஊரினின்றும் காஞ்சிபுரம் செல்லும் தமிழக அரசு பஸ் ஆற்றில் நீர் வந்தமையால்

★ இக்குறிப்பிட்ட கடிதம் ரூ. 15 பரிசு பெறுகிறது.

தவறிப் போய்ப் பாதையிலிருந்து பக்கத்திலே மணல் வெளியில் இறங்கி விட்டது. இன்று (27-10-69) காலை எட்டு மணி வரை அதனை எடுக்க எந்த முயற்சியும் செய்யப்படவில்லை. இன்னும் எத்தனை நாட்கள் இருக்குமோ, தெரியவில்லை. தனித் துறையார் விட்டிருப்பின் மறு நாளே அந்த பஸ் உடனடியாக இழுக்கப்பட்டு ஓடிக் கொண்டிருக்கும்! நான்கு நாட்களாக அந்த பஸ் சம்பாதிக்க வேண்டிய பணம் நஷ்டந்தானே! பொதுத் துறையால் ஏற்படும் நஷ்டங்களுக்கு இதுவும் ஓர் உதாரணம் போதும்.

நெமிலி
27-10-69 நாகலட்சுமி

காங்கிரஸ் கட்சி இல்லையென்றால் நாட்டுக்கு எதிர்காலமே இல்லை என்கிற இந்த மந்திரத்தைப் பிளவுபட்டு நிற்கும் காங்கிரஸ் கட்சியின் இரு தரப்பினரும் ஜபித்துக் கொண்டிருக்கின்றனர். இதை அவர்கள் உணர்ந்து சொல்பவர்களாய் இருந்தால் மீண்டும் இணைவதற்கு ஒரு பொருத்தமான சந்தர்ப்பத்தைத் தேடிக் கொண்டிருக்க மாட்டார்களா? ஒட்டைச் செம்பில் புளியை ஒட்ட வைத்து எத்தனை நாட்களுக்கு உபயோகப்படுத்த முடியும்?

27-10-69
சென்னை - 1 நா. ஜெயராமன்

முன்னொரு காலத்தில் அகில இந்திய ரேடியோ நல்ல இசைக் கச்சேரிகளை இரவு 7-45 மணியிலிருந்து 9 மணி வரையில் ஒலி பரப்பி வந்தது. கச்சேரிகளைக் காலாகாலத்தில் கேட்டுவிட்டு, தூங்கப் போவது சாத்தியமாக இருந்தது.

கடந்த சில ஆண்டுகளாக இத்தகைய இசைக் கச்சேரிகள் இரவு 9-15 மணிக்குத்தான் தொடங்கி 10-30 மணிக்கு முடிவடைகின்றன. அகில பாரத சங்கீத நிகழ்ச்சிகளோ இரவு 9-30 மணிக்கு ஆரம்பித்து இரவு 11 மணிக்குத்தான் முடிவடைகிறது.

இவைகளுக்குச் சிகரம் வைத்தது போல், இப்போது சங்கீத சம்மேளனத்தில் முக்கியமான கச்சேரிகள் இரவு 10-45 மணிக்கு ஆரம்பித்து 11-55 மணிக்கு முடிவடைகின்றன. இவைகளை யார் விழித்துக்கொண்டிருந்து கேட்பது? வேலை செய்யும் நாட்களில் இவைகளைக் கேட்டால் மறு நாள் வேலைக்கோ பள்ளிகளுக்கோ, கல்லூரிக்கோ போக முடியுமா? அல்லது இவர்கள் யாரும் இவற்றைக் கேட்க வேண்டிய அவசியம் இல்லை என்பது அகில இந்திய ரேடியோ தயாரிப்பாளர்களின் கருத்தா?

இருக்கலாம். ஏனென்றால், 28-10-69 அன்று இரவு 9-30 மணிக்குச் சாத்தூர் சுப்பிரமணியம் அவர்களின் கச்சேரி தொடங்குவதற்கு முன்னால் நிலைய வித்துவான், வானொலியில் வாசித்த ராகம் நீலாம்பரி!

திண்டுக்கல்,
29-10-69 எஸ். ஜெயஸ்ரீ

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras
Managing Editor: T. Sadasivam

இவன்தான் கிரீஷ் மூன்று மாதக் குழந்தை. பிறந்த முதல் வாரத்திலிருந்து இவன் அமுல்ஸ்ப்ரே சாப்பிட்டு வருகிறான். இவனது வளர்ச்சி வியக்கும்படியாக இருக்கிறது.

# இப்பொழுது அவனைப் பாருங்கள்!

**"அமுல்ஸ்ப்ரே சாப்பிட்டு உயிர்த்துடிப்புடன் விளங்கும் இவன், நாள்தோறும் அறிவு வளர்ச்சியும் பெற்று வருகிறான்"** என்கிறார், 13 மாதக் குழந்தையான கிரீஷின் தந்தை திரு. திலீப் சௌபல்.

உங்கள் குழந்தையின் எடை, பிறந்த ஆறு மாதங்களுக்குள் இரட்டிப்பாகவும், ஒரு வருடத்துக்குள் மும்மடங்காகவும் அதிகரிக்க வேண்டும். எனவேதான், அமுல்ஸ்ப்ரே, எளிதில் ஜீரணிக்க கூடிய சரிவிகித உணவாக அமைக்கப்பட்டுள்ளது. இது குழந்தையின் உடல் வளர்ச்சிக்கு மிகவும் அவசியமான புரதச்சத்தை அதிகமாக கொண்டிருக்கிறது.

குழந்தை உணவுகள் தயாரிக்க அமெரிக்காவில் உபயோகிக்கப்படும் உன்னதமான ஸ்ப்ரே-ட்ரையிங் செய்முறையினால் ஆக்கம்பெற்றது அது.

ஆயிரக்கணக்கான தாய்மார்கள், தங்கள் குழந்தைகள் பிறந்த முதல் வாரத்திலிருந்தே அவற்றிற்குத் தாய்ப் பாலுக்குப் பதிலாகவோ அல்லது உபரி உணவாகவோ அமுல்ஸ்ப்ரே புகட்டி வருகிறார்கள். அதனால்தான், தயாரிக்கத் தொடங்கிய இரண்டு ஆண்டுகளுக்கு உள்ளாகவே அமுல்ஸ்ப்ரே இந்தியாவிலேயே உச்ச விற்பனையுள்ள குழந்தை உணவாகிவிட்டது.




# அமுல்ஸ்ப்ரே

**தாய்ப்பாலுக்குப் பதிலாகப் புகட்டச் சிறந்தது!**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon